உ

சிவமயம்.

பாண்டிநாட்டிலுள்ள

சோதிவனத்தைச்சேர்ந்த

திருங்கபுரமென்னும்,

# கோட்டூர்ப்புராணம்.

இஃது

தஞ்சாவூர்ச் சதாவதானம்,

பிரம்ம-ஸ்ரீ,

சுப்பிரமணிய ஐயரவர்களால்

இயற்றப்பெற்று

தேவகோட்டை

இளையாற்றக்குடிக்கோயில்

பெருமரபூர் வகுப்பு

வெ-ஆ-நா.

ம-ா-ா-ஸ்ரீ,

முருகப்பசெட்டியாரவர்கள்

அநுமதிப்படி

சென்னை:

பண்டித மித்திர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விளம்பிஞு சிங்கரவீ.

உ

சிவமயம்.

# சிறப்புக்கவிகள்.

தேவகோட்டை, வீர-லெ-வித்துவசிகாமணி

ம-ா-ா-ஸ்ரீ, சிந்நயச் செட்டியாரவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

உலகமெலாம் புகழ்கோட்டூர் மான்மியத்தை யமிழ்தவண்மீட்
டொளிப்பத் தந்தான்
றிலகமென வுயர்கல்வி வன்றொண்டர் பாற்றமிழ்நூ
றெளியக் கற்றோன்
பலகலைமுன் னெற்குணர்த்திக் குரவமைந்து பின்புசகா
பாடி யானோ
னலகியனூ றவதானப் புலமைச்சுப் பிரமணிய
வணிவல் லோனே.

---

தஞ்சாவூர் ஜில்லா பட்டுக்கோட்டை தாலூகா

பில்லுவலசை பிர்ம-ஸ்ரீ,

பிர்மபுரீசஐயரவர்களியற்றிய

அறுசீரடியாசிரியவிருத்தம்.

செந்தமிழாசிரியன்முன மருச்சித்துப் புகழ்ந்துதுதி
செய்தகோட்டூர்
நந்தநிதியாகுமகத் தீசன்மான்மியமதனை
நற்றமிழ்ப்பாத்
தந்தனன்சீர்த்தஞ்சைச்சுப் பிரமணியமாமறையோன்
சதாவதானி
முந்துறையவ்வாசிரியற் காசிரியனருளினெனின்
மொழிதற்பாற்றோ.

---

# சிறப்புக்கவிகள்.

தேவகோட்டை
இளையாற்றக்குடிக்கோயில்
பெருமரபூர்வகுப்பு
ம-ள-ள-ஸ்ரீ,
வெ. ஆ. தி. மா. சிதம்பரச்செட்டியாரவர்கள்
இயற்றிய

## நிலைமண்டில ஆசிரியப்பா.

திருவளர் சாரலின் மருவிரு குகையுங்
கோணி நீண்டபல் வேணுவின் குழுவு
மாங்கவை நடுவட் டேங்குபே ரருவியு
மீமிசை யுயர்பளிக் காமிணைப் பாறையூ
டணிகெழ வுதிர்ந்த கணிவீக் குவியலுந்
தாங்கிவா னளவு மோங்கிய வோங்கலி
னுச்சியின் கண்ணோர் பச்சிள் மஞ்ஞை
யிடப்பான் மருவ முடப்பான் மதியமு
மங்குற் கங்கையுந் தங்கச் சிரத்துப்
பொன்றக மலர்ந்து நின்றிடு மரவஞ்
சைலத் துயர்ந்த கைலையங் கிரியிற்
புனிதமார் வீதிக் கினிதெழுந் தருளக்
கூவலி னாழ்ந்து மேவிய செங்கணுஞ்
சோரா வொண்மருப் பீரா யிரமு
முசலே நிகர்ப்ப வீசுந் துதிக்கையு
மத்தக யுகநடு வைத்தசிந் தூரமுஞ்
செயிரறக் கொளூஉ மயிரா வணமீ
துமையவ டன்னுடங் கமையச் சானவி
யோடத்த மாமதி சூடத் திலங்கத்
துன்னார் புரமெரி பொன்னார் மேனியன்
மேவுதல் காட்டுந் தாவில் குறிஞ்சியும்
விழுச்சுட ரணையா னெழுச்சிக் கேற்பப்
பரிதியிற் கதிர்கால் விருதா வளிக
டெற்றிடத் திருமுன் னுற்றமை யொப்பத்
தனியேற் றிராசி நுனியேற் றுயர்ந்து
நிற்குங் கோங்க நற்கொடி யாகவுங்

தொத்தலர் மாதவி சத்திர மாகவும்
வந்துவந் துறவசை நந்துபூங் கொம்ப
ராடகப் பணிவெயி னாடகப் பெண்க
ளாகவு * மன்னிய வோகையொ டாய
ருதுவே யொலிநிறை தீதறு முல்லையு
மாகந் தோய்ந்த பூகந் தெங்கிடை
யிவரும் பாளைவெண் கவரி யாகவு
மேடவிழ் பூந்தடங் கோடிக மாகவும்
வாழ்குயில் கூவல் யாழொலி யாகவும்
விளங்கப் பற்பல வளங்கொண் மருதமுங்
கூந்தற் பந்திக ளேந்திய மடல்க
ணசையுற வளிசெயும் விசிறி யாகவும்
விரசு மொலிக்கடன் முரச மாகவு
முக்கவ ராயெழீஇத் தொக்க துவர்க்கொடி
யால மளாவிய சூல மாகவும்
பொலிதரக் கொண்டு மலியு நெய்தலும்
வெண்மல ரொடுமௌி யண்மி முரலத்
தேன்றவ வொழுக்கி நான்றகாய் பலகொண்
டெண்ணற மிடைந்து நண்ணிய முருங்கைகள்
பூதிகண் டிகையணிந் தோதித் தோத்திர
நீர்விழிப் பொழிந்து வார்சடை புனைந்த
செவ்விய வன்பரத் திவ்விய மூர்த்தியைக்
கரிசறு மாறு தரிசித் துற்றிடும்
விழுமிய தோற்றங் கெழுமிய பாலையு
மீண்டி விளங்கும் பாண்டிநன் னாட்டிற்
றன்புடைக் கொடிய வைம்புல னடக்கித்
தவம்புரி வோர்க்குச் சிவம்புணர் தருமா
ரொருதி யளிக்குஞ் சோதி வனத்துட்
சொல்லொணுத் தனது பல்வளத் திற்சிறி
தோதப் புக்கவவ் வாதி சேடனு
மநந்தமென் றமையா லநந்தனென் றவனைச்
சொற்றிட நிலவுங் குற்றமி லாப்பதி
மூர்த்தி பெருந்தலந் தீர்த்தமா மூன்று

---

* மன்னிய - வினையெச்சம்.

பெருஞ்சிறப் பிணையு மொருங்கேய் திருப்பதி
வண்ணமார் கமலக் கண்ண ரிருவருந்
தேவரு மறையு மேவருங் காணுன்
பொற்பொது வாடு மற்புதக் கூத்தன்
பாலனை யடர்த்த காலனை யுதைத்தோன்
சின்மயச் செல்வி நின்மலை யாய
சவுந்தர நாயகி யுவந்தமர் பாகன்
மறுவறு ஞானக் குறுமுனி மேனுட்
பண்ணிய பூசைகொள் புண்ணிய னம்முனோர்
பழியொழி யடிமை வழிவழி செய்ய
மெய்ம்மையி னெங்குல தெய்வமா யமர்வோன்
பேசரும் புகழகத் தீசப் பெருமான்
மருடப வடியர்க் கருள்புரிந் துறையுஞ்
சீர்ப்பதி யெனுங்கோட் டூர்ப்பதி மான்மியம்
வடமொழி மேயதைத் திடமுற மொழிபெயர்த்
தமிழ்திற் சுவைத்தெனத் தமிழிற் றந்தனன்
விஞ்சையர் புகழுந் தஞ்சைமா நகரான்
விப்பிர மணியெனுஞ் சுப்பிர மணிய
சன்மம் புனைந்தோன் றன்மமுன் னுன்கு
பயன்றரு கல்வியை நயம்பெறக் கற்றோன்
சித்தாந் தமெனு முத்தம சைவ
மதாபி மானியாஞ் சதாவ தானியென்
றறைபுகழ் வேய்ந்த மறைவல் லோனே.

---

தேவகோட்டை

ம-ள-ள-ஸ்ரீ, அ. ரு. ச. அருணசலஞ்செட்டியாரவர்கள்

இயற்றிய

நிலைமண்டிலவாசிரியப்பா.

சீர்மலி பாண்டித் தென்னு டதனி
லார்தரு கூட லணிநகர்க் குணபான்
மருத நெய்தன்மா முல்லை குறிஞ்சி
மருவிய வளத்து மாண்பிற் சிறந்த
மரவுரி யாளர் மகிழ்ந்து மகஞ்செயு
மிரவெரி வனத்து மினமணி கொழிக்குஞ்

சங்கஞ் சூழ்ந்த தடவயற் கோட்டூர்ப்
பொங்கர வணிந்த புனிதன் றனக்குப்
புலவர்கள் பெருமான் பொதியை முனிமுன்
மலர்த்தொடை வேய்ந்து வணங்கி யாங்கு
நலனுறு கவித்தொடை நயந்து மிலைந்தான்
பொலன்ணி பொன்மதில் பொலிதஞ்சை வாணன்
நிதான மாக நேர்ந்தபே ரவையிற்
சதாவ தானந் தகைமையிற் புரியும்
விப்பிர மரபில் விழூஉத்தகத் தோன்றிய
சுப்பிர மணியனுந் தூயநா வலனே.

---

தேவகோட்டை

ம-ா-ா-ஸ்ரீ, பள. அ. ராம. சு.

வெங்கடாசலஞ்செட்டியாரவர்கள்

இயற்றிய

நேரிசைவெண்பா.

கோட்டூரின் மான்மியத்தைக் கூறும் வடமொழியின்
மாட்டோர்ந்து செந்தமிழின் வாய்த்தந்தான்—வேட்டோருக்
கின்பமுற வேசுப் பிரமணிய னென்னும்வே
ளன்புடைமை தோன்ற வணிந்து.

---

விருட்சியூர்

பிர்மஸ்ரீ,

அருணாத்திரி ஐயரவர்கள்

இயற்றியது.

---

வடமொழிமேயகோட்டூர் மான்மியந்தமிழிற்றேர்ந்த
குடமுனிவனுமகிழ்ச்சி கொண்டிடவிரித்துரைத்தான்
றடமிகுதஞ்சைவாணன் சதாவதானிப்பேர்பூண்டோன்
சுடர்மதிபுனைவார்க்கன்பன் சுப்பிரமணியவேளே.

---

# சிறப்புக்கவிகள்.

புரசை - அஷ்டாவதானம்
சபாபதிமுதலியாரவர்கள் மாணுக்கர்
ம-ள-ள-ஸ்ரீ,

## திருமயிலை - சண்முகம்பிள்ளையவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

கண்பூத்த நெற்றியினு னுமையொடுங்கான் முளையொடுங்கோல்
கைக்கொண்டாண்ட
மண்பூத்த புகழ்ப்பாண்டிக் கோட்டூர்மான் மியந்தமிழால்
வனைதல் செய்தான்
எண்பூத்த வவதாந மொருநூறு மொருகொடியி
லியற்ற வல்லோன்
வண்பூத்த வயற்றஞ்சை வாழியசுப் பிரமணிய
மறைவல் லோனே.

---

சென்னைக் கிரிஸ்டியன் காலேஜ் தமிழ்ப்பண்டிதரும்
பண்டித மித்திர யந்திரசாலைக் கதிபருமாகிய
ம-ள-ள-ஸ்ரீ,

## ஈக்காடு - இரத்தினவேலுமுதலியாரவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தரங்கமெறி வரநதிச்செஞ் சடைக்கடவு ளுறைதருபஃ
றளிக டம்முட்
சிருங்கபுர மெனுங்கோட்டூர் மான்மியந்தென் மொழியதனாற்
றெரித்தல் செய்தான்
அருங்கலைக ளெண்ணிலவோர்ந் தவதாந நூறியற்று
மறிஞன் றஞ்சை
வருங்குரவன் மறைக்குலத்தில் வருசுப்பிர மணியநா
வலவ ரேறே.

சிறப்புக்கவிகள் - முற்றிற்று.

---

உ

சிவமயம்.

# திருங்கபுரம் என்னும், கோட்டூர்ப்புராணம்.

## பாயிரம்.

### கவுரிவிநாயகர் துதி.

திருமேவு நிறமுடையா னலர்மேவி யுறைவுடையான்
 செம்பொ னுய
தருமேவு பதியுடையான் முப்பதமு மிருபதத்தைத்
 தாழ்ந்து போற்றி
மருமேவு நறுமலர்கொண் டருச்சித்த பேறென்ன
 வழங்கு மேன்மைக்
குருமேவி யொளிர்கோட்டூர்க் கவுரிவி னயகனடியைக்
 குறித்து வாழ்வாம். (க)

### அகத்தீசர்.

சீர்பூத்த மணிமருமத் தேர்பூத்த நரைவிடையான்
 றேவர்க் காப்பான்
கார்பூத்த களமுடையான் வார்பூத்த சிலைப்பூட்டிக்
 காப்பாப் பூண்ட
பார்பூத்த பணியுடையா னீர்பூத்த வளக்கோட்டூர்ப்
 பதிவாழ் வேணி
யார்பூத்த மலரிதழித் தார்பூத்த வகத்தீச
 னடிகள் போற்றி. (உ)

### சவுந்தரநாயகி.

ஒருமலையைக் குடையாக்கிப் பசுப்புரந்தாற் கிளையாளென்
 றுலகம் போற்ற
வொருமலையைச் சிலையாக்கிப் புரம்பொடித்தா னிடம்பிரியா
 துறைந்து தென்பா
லொருமலையைக் குறுமுனிவன் பெறவருளாற் றந்தையென
 வுயர்நீ கார
வொருமலையைப் பெற்றுதித்த சவுந்தரநாயகிமலர்த்தா
 ளுள்ளம் வைப்பாம். (ஙு)

சபாநாயகர்.

பொன்னினு லேவனையும் வயமாக்க றருமென்னல்
புதுக்கி யாங்குப்
பொன்னினு லாமலையைக் கோட்டியதைக் காட்டியிகல்
பொடித்து நல்கும்
பொன்னினுந் சுந்தரரைச் சிறப்பின்வய மாக்கியெலாம்
பொதுவி னுக்கப்
பொன்னினுற் பொலிந்தோங்கும் பொதுவினட்டம் புரிவானைப்
போற்றி வாழ்வாம். (சு)

சிவகாமியம்மை.

வேறு.

துடியினுற்சுட ரழலினு லூன்றிமேற் றூக்கி
ரடிகளால்வலக் கரத்தினுற் றந்தவனுக்குங்
கடிவிலாதவைந் தொழிலுமே கடைக்கணு லருளா
நடனநோக்கிநின் றருள்சிவ காமிதா ணயப்பாம். (ரு)

தக்ஷிணமூர்த்தி.

வேறு.

ஒன்றெனத் துணிபு செய்தார்க் கொன்றெனத் தோற்றந் தந்தபின்
றிரண் டெனத்துணிந்தார்க் கிரண்டெனத் தோற்றந் தந்தே
யொன்றியொன் றுமனிற்கு மொருபொரு டானே யென்ன
வன்றிரு விரலி னுல்வர்க் கறிவுறுத் தவனைத் தாழ்வாம். (சு)

வயிரவர்.

வேறு.

பன்னீருலகிற் சிலர்தம்மைப் பதியென் றுள்ள மருண்டுறையுஞ்
சொன்னீர்மையையே யுண்மையெனத் துணிவுற் றிறுமாந் தகங்க
முன்னீரனைய கருமேனி முகுந்த னெழுவாய்த் தேவருடற் [ரித்த
சென்னீரேற்ற சென்னியனை திகழ்கை வடுகன் றுள்போற்றி. (எ)

விநாயகர்.

வேறு.

தன்னை வேண்டலர் தம்வினை பாற்றிமுன்
றன்னை வேண்டினர் தம்வினை முற்றுவித்
தென்னை வேண்டிய தென்னையெ னுவளித்
தென்னை யாள்விக்கி னேசனற் றுளரண். (அ)

முருகக்கடவுள்.

முத்தி கைக்கொள முன்னுபு நித்தலும்
பத்தி கைக்கொளப் பாடிப் பராவுமெய்ச்
சித்தி கைக்கொளுஞ் சீரியர் தெவ்வறச்
சத்தி கைக்கொளுஞ் சண்முகற் போற்றுவாம். (கூ)

திருநந்திதேவர்.

அந்தில் கைலையி லண்ணலைச் சேவிப்பான்
வந்த தேவர்முன் வந்தனை கொண்டுபின்
னுந்தி யுள்விடுத் தொய்யென வோட்டுசூர்
நந்து சூரற்கை நந்தியை வந்திப்பாம். (க0)

கலைமகள்.

அலைமக ளலைமக ளாத னீத்தொரு
நிலைமக ளாக்கவி நிகழ்த்தும் வாக்கினைத்
தலைமக ளெனத்தனைச் சார்ந்த வர்க்கருள்
கலைமக ளடிமலர் கருத்திருத்துவாம். (கக)

தமிழாசிரியர்.

சகத்தைச் சூழ்தரு சந்திரா தித்தர்முன்
னுகத்திற் போக்கற வோங்கிய விந்தமா
நகத்தைத் தாழ்த்திதென் னற்றமி ழிற்கிய
லகத்தி யத்தை யளித்தவற் போற்றுவாம். (கஉ)

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.

அதிக வாண்பனை பெண்பனை யாகமட்
பொதியு மென்பொரு பெற்றொடி யாகநீர்
நதியி லேட்டி னடையெதி ராகநற்
பதிக மோதுசம் பந்தனைப் பாடுவாம். (கரு)

திருநாவுக்கரசுசுவாமிகள்.

முன்னப்பேற முடித்த சடாதர
னென்னப்பன்றின மென்னையே பாடுவா
னென்னப்பன்னிய வின்னுரை யாற்புகழ்
மன்னப்பற்கடி மைத்தொழி லாற்றுவாம். (கச)

சுந்தரமூர்த்திசுவாமிகள்.

முதலை செற்றொரு மொய்ம்மாப் புரந்திடு
மதலை தோன்றரி வட்க விறந்ததா
முதலை யோடது முன்னுண்ட பார்ப்பன
மதலை யுந்தரு வன்றொண்டற் போற்றுவாம். (கரு)

மாணிக்கவாசகசுவாமிகள்.

மண்டு மாயையான் மாக்களை வேதித்துப்
பண்டை வண்ணமற் றுக்கும் பரற்றெழு
தண்டு மோரிமா வாக்கிப்பின் னவ்வெலாம்
பண்டை வண்ணமாப் பாடினற் பாடுவாம். (கசு)

சண்டேசர்.

ஆற்கடத்தினி லாடினற் காட்டற்காம்
பாற்கடத்தினைப் பாற்றிய தந்தைதன்
காற்கடத்தினா றுக்கிப்பிற் கால்வருந்
தோற்கடத்தைத் துறந்தாற் றொழுவமால். (கஎ)

அறுபத்துமூவர்.

ஆவ ணங்கொண் டரன்றடுத் தாண்டரு
ளாவ வூர்வரு நாவலர் நாமலர்
மேவு சீர்த்தி விளங்கு மறுபத்து
மூவர் பாத முடிக்கு முடிக்குமே. (கஅ)

வாழ்த்து.

வேத வேள்வி விளங்குக பெய்கவான்
சீத மாரி செழிக்க சகஞ்சைவ
போத மோங்குக புன்மைப் புறமத
வாத மோவுக மன்னர்கோல் வாழ்கவே. (கசு)

நூற்பயன்.

வேறு.

மாமலி தருஞ்சீர்க் கோட்டூர் வாழகத் தீசன் காதைப்
பாமரு வுறுநே யத்திற் படிப்பவர் கேட்போர் கஞ்சப்
பூமகள் கருணை வாய்ந்து புண்ணியப் புதல்வர்ப் பெற்றுத்
தோமிலா திம்பர் நீணாள் சுகித்துப்பின் னரன்றாள் வாழ்வார். ()

அவையடக்கம்.

ஏவருந் துருவிக் காணா வெம்பிரான் கோட்டூ ரீசன்
மேவுமான் மியந்தென் சொல்லால் வெண்பொடி மணியைவன்ன
மூவருட் பொருள்கைக் கொண்டு மும்மலந் துமித்தோர் கூறென்
றேவவென் சொன்மா சோச்சி யேற்பவென் றுரைக்கலுற்றேன்.

தமிழினிற் குரவு பூண்ட தாபதன் றுபித் தேத்துந்
தமிழினாட் டியர்கோட் டூரின் சரிதையை யிழுதை யேன்றன்
றமிழினிற் புகல லுற்ற தன்மைசூர் புன்மைத் தேனுந்
தமிழன்யா னென்னல் பற்றிச் சாதிமா னிக்தார் கொள்வார். (உஉ)

முனமுயர் தென்மொழிக்கு முதலிலக் கணஞ்சொற் றோனே
புனைதரும் புகழ்ச்சிருங்க புரத்துமான் மியத்தைப் புல்லேன்
வனைதர வெண்ணியொன்றை மற்றொன்று வினைதந் தாலு
மினவழு வமைதியுங்கொள் ளியலினார் கொள்ளார் கொல்லோ. ()

மத்தமு மலர்மந் தார வனத்தகத் தீசன் வேணி
யுத்தம நறும்பூங் கொன்றை யொடுமிலை தந்த வாற்றான்
முத்தமிழ்க் குரவன் சேர்த்த மொழியொடு குழைதாழ் காதுஞ்
சித்தொரு சிறிதுமில்லேன் செப்புபுன் சொல்லு மேற்கும். (உச)

சிறப்புப்பாயிரம்.

மகபதி பதிநேர் தஞ்சை வாணனான் மறைவ லாளன்
றிகழுறு சதாவ தானி சிவற்ச கோத்தி ரத்தான்
றொருகலை பல்ல வாய்ந்தோன் சுப்பிர மணிய சன்மன்
சகமிசை நாட்டுங் கோட்டூர்த் தலத்துமான் மியஞ்சொற் றானே.()

பாயிரம் - முற்றிற்று.

---

# பாண்டித்திருநாட்டுப்படலம்.

தருக்கிளர் கமலச் செங்கைச் சவுந்தர நாயகிப்பே
ரருட்கடல் புணர்நீர் வேணி யகத்தீச ரமர்ந்து வாழும்
பொருட்கிட மாகுங் கோட்டூர்ப் புண்ணியப் பதிமுற் பல்ல[ற்றும்.
திருக்குலாந் தலங்கொள் பாண்டித் திருநாட்டின் வளஞ்சொல்லு

அன்னையும் பிதாவுமேயிவ் வகிலத்தி னுயிர்கட் கெல்லா
முன்னறி தெய்வமென்னு முதுமொழிக் கியல யார்க்கு
மன்னையா கியகயற்க ணம்மைமுன் னும்பிதாவா
முன்னவன் பின்னுங் காத்த முறைமைத்தாம் பாண்டிநாடு. (உ)

இருமுது குரவர் தங்கட் கியன்றதெக் குணமோ வஃதே
தருமகார்க் குளதா மென்னுந் தன்மைக்குத் தகவே யந்த
விருமுது குரவருங்காத் திட்டவா றுக்கிரப்பேர்ப்
பெருவழு தியுங்காத் தோம்பும் பெருமைத்தாம் பாண்டிநாடு. ()

அரிமருத் துவன்சேய் கைவில் லாற்புடை பிரகரத்தால்
விரிதரு முலகி லெங்கும் வியாபியென் றுணர்த்தி நின்றோ
னரிமருத் தனன்கைம் மூற்றி னடியான்மீட் டுணர்த்துமாறு
பெருநதி வெள்ளம் பொங்கும் பெருமைத்தாம் பாண்டிநாடு.(ச)

எத்தகைத் தேவர்க்கும்மா தேவனென்பானே நம்மை
யொத்தவ னென்னப் பட்ட வொருமுனி யாசா னுகத்
தித்தியா நிற்குந் தூய செந்தமிழ்ச் சுகந்தம் வீசி
யெத்திசை களுங்கமழ்க்கு மிருமைத்தாம் பாண்டிநாடு. (ரு)

வேறு.

உலகெலாம்படைத் திடுமய னூர்தியை மான
நிலவுவான்வழிப் படர்ந்துநீர் நெடுங்கடல் பருகிக்
குலவுபைம்புனக் கோற்றொடிக் கொடிச்சியை நிருவி
யிலகுவேலவ னூர்தியொத் தெழுந்தது கொண்மூ (சா)

அன்னமாமயி றோகைமேல் விரித்துநின் றுங்குப்
பன்னுவானக முழுவதும் புதைபடப் படர்ந்து
* தன்னதாகிய நிலத்தினைச் சார்தர லென்னத்
தென்னமாமல யத்தினைச் சேர்ந்துமொய்த் தன்றே. (எ)

சாற்று மச்சிகிப் ‡ பீலிமேசகமென மின்னி
யேற்ற வன்னதின் § முற்பவக் குரலென விடித்தத்
தோற்றத் தன்னதேந் திபசிலை துணையவில் வாங்கிப்
பாற்று கோடையாம் பாந்தண்மேற் பொழிந்ததா லம்பே. (அ)

பொழிந்த வப்புமா ரியிற்கொடுங் கோடையாம் புயங்கங்
கழிந்த வெப்பமாங் கவிடங் கழிதரப் பிலத்து
ணுழைந்தொ ழிந்ததந் நூழிலாட் டிற்பிர தாப
மெழுந்த தாமென மலயநின் றிழிந்தசெவ் வருவி. (கூ)

சாரலிற்குழீஇ யொன்றுறச் சார்ந்தவந் நீத்தம்
வாரியொன் றுவ ரொழிந்ததெண் ணீர்த்ததாய் வரவு
நேரவக்குறிஞ் சிப்பொரு ணோர்ந்தவை யெல்லாம்
வாரிவந்தது பொருநையாம் பெயர்பெறீஇ வழியே. (க0)

தத்திமுல்லையைக் குறிஞ்சிசெய் தம்மரு தத்தை
மொய்த்துமுல்லைய தாக்கிநெய் தலைப்பணை யாக்கி
யத்தியாயமுந் நீரினை நானில மாக்கிச்
சித்தர்தஞ்செய றெரித்தது பொதியிலாம் பொருநை. (கக)

செப்புதாமிர பன்னியென் றுலகெலாந் திகழு
மற்புதத்திரு நதிவிய னளக்குநர் யாரே
யொப்பிலாதுயர் குறிஞ்சிமுன் னுகுமென் றோது
நற்புகழ்க்குல வைந்திணை வளஞ்சில நவில்வாம். (கஉ)

* தன்னதாகியநிலம் - குறிஞ்சி. ‡ பீலிமேசகம் - மயிற்றோகையின்கண். § முற்பவம் - குரவுகியபிறப்பு.

குறிஞ்சி.

சகநிறைந்தபல் லாயிர வுயிர்களுந் தழைப்பச்
சுகநிறைந்தருள் சுரந்திடு கடைக்கணோக் களித்தெற்
கிகல்புரிந்தவர்ச் செகுப்பவே லேந்திநின் றெனையாள்
குகனமர்ந்துவீற் றுறைந்தர சாள்வது குறிஞ்சி. (௧௩)

வேடர்கல்விடர்த் துன்றிய விருலை யீவெருட்டிப்
பீடுயர்ந்தவொண் பாறையின் குழிகளிற் பிழிவார்
கூடுமன்னவை யங்கணுங் குழுமி மொய்த்திடுமா
லோடவோச்சினும் விலகுறு வாதுல ரொப்ப. (௧௪)

கொம்பின் மேலுறு மிருவிழி நறைநிறை குழியிற்
கொம்பின் மெல்லிடைக் கொடிச்சியர் கறைப்பெய்து கரியின்
கொம்பி னூலிடித் திடுதினை மாப்பராய்க் கூடக்
கொம்பி லொற்றையாற் கிளையற்கக் குறிஞ்சியு மூட்டும். (௧௫)

முக்கடம்பொழி கறையடிக் குஞ்சர முழங்கிப்
பக்கமார்சுர நதிப்புனல் பணைக்கையான் முகந்து
தொக்ககன்றுகட் கூட்டிமிக் குளத்தைவெண் டுங்க
லொக்கன்மேனியிற் றாவுபு கிட்டிநட் புறுமால். (௧௬)

முல்லை.

மாலவன்றனை நானில வரைப்பினி லிடைக்கோ
பாலனென்றுரை பனுவலை நிறுத்துவா னுறைந்து
கோலமார்பசு நிரைபல குழுவிட மிதெனப்
பாலனம்புரி பண்பினிற் சேர்த்தது முல்லை. (௧௭)

மாயவன்புயங் களிலணிந் திடவன மாலை
யீயுமங்கைபங் குடையவன் சடைக்கொள விதழி
மேயவீதரும் வேலனங் கரன்கொள வெட்சி
தூயவன்னியு நல்கிடுந் தொகுவள முல்லை. (௧௮)

கொன்றை வேய்ங்குழ லொலியுமான் குலங்களின் களத்தி
லொன்று கண்டையி னொலியுநீர்க்கலுழியி னொலியுந்
துன்று மாய்ச்சியர் ததிகடை யொலியுமே துவன்றி
யொன்றையொன் றடக் குந்திரு வுற்றது முல்லை. (௧௯)

தோயு முல்லையிற் சுரபியு மவற்றினக் கன்று
மேய கற்பகங் களுஞ்சுவை மிக்குறு மமிழ்து
மேயு மாறுதொக் குள்ளுன வதுவியப் பின்றே
தூய வண்டர்கள் சூழ்ந்துறை யுளியுற லியல்பே. (௨0)

கொள்ளுஞ் சாமையு மாடமுங் கோத்திர வமுங்கா
ரெள்ளு மொச்சையு மாயர்குன் றெனக்குவித் திடுவார்
தெள்ளு பாறதி யோடுமச் சிகையுமச் சாமில்
வெள்ள மென்னவம் மெல்லியர் பெருகுவித் திடுவார். (உக)

மருதம்.

வேறு.

சங்குதா மரையுருக்கொ டனநிதிக் குவையும் பொன்மை
தங்கிய கற்பமாதி தருக்களுஞ் சுரையூண் மள்ள
ரெங்கணும் பரவரம்பை யீட்டமு மீண்டலான்வா
னங்கணிந் திரன்வேட்டென்று மளிப்பது மருதவேலி. (உஉ)

சந்தனத் துணியுங் கோங்குஞ் சார்ந்தகுங் குமமுங் கந்தந்
தந்திடு மகிலுந் தேவ தாரநற் குறடும் வேழத்
தந்தமு மணியும் பொன்னுந் தழைமயிற் பீலிக்காடு
முந்திமேற் பொங்கிவந்த துறும்புனற் பொருநை நீத்தம். (உங)

வந்தநீர்ப் புதியவெள்ள மதகுகால் வழியா லேரி
யந்தமில் குளங்கண் மேவி யங்குநின் றகணிபுக்க
துந்திய சுருவையாலூட் டேணவி மறையோர் வேள்விச்
செந்தழ லுவினின்று தேவர்வாய்ப் புகுதன் மான. (உச)

பம்புதண் ணுமையி னோதை பறையறை பெரிய வோதை
கொம்பிடை யுழத்திமார்வாய்க் குரவையி னெடிய வோதை
யம்படை மள்ளரோதை யம்மத கொழுக்கு மோதை
யும்பரா ரூர்க்குமப்பா லோடிய வொருமித் தன்றே. (உரு)

புதுப்புனல் பழனந்தோறும் புகுதலுங் கருங்கான் மள்ளர்
மதுப்புனல் வாய்ப்புகுத்தி மகிழ்வுறீ இத் தேக்கெறிந்து
கதிர்ப்புறு கலப்பையாதிக் கருவிக ளனைத்துங் கைக்கொண்
டொதுக்கிட மின்றித்தொக்கா ருழுதொழின் முயற்சி மிக்கார். ()

அலத்தொடு நுகம்பிணித்திட் டறத்திறை யூர்தி யஞ்சும்
வலத்தவாம் பகட்டிரட்டை வலித்திடக் கையின்மேழி
வலக்கையின் முட்கோல்கொண்டு வாயொலி யுரப்பி யோவா
யுலப்பற வோட்டிமள்ள ருழுதனர் கழனி யெல்லாம். (உஎ)

பன்னுநூ லனைத்துந்தேர்ந்த பாவலோர் புனையுஞ் சீர்மை
துன்னுசித் திரகவிக்குட் சொல்சது ரங்க பந்த
மென்னநே ருங்குறுக்கு மியல்படைச் சால்க டோன்ற
மன்னிய களமர்யாரும் வலம்பட வுழுதனர் மன்னோ. (உஅ)

அள்ளிடு சேறதாக்கி யமைதரப் பரம்பு போக்கித்
தெள்ளிதிற் சயப்படுத்தித் தேவர்கோன் றன்னை யேத்தி
வெள்ளிய நெல்லின்வித்தை வீசினர் பழனமெல்லாம்
வள்ளியோர் தம்மைமான வலமிகு கருங்கான் மள்ளர். (உகூ)

பருவநே ரறிந்து நன்னீர் பாய்ச்சவவ் வித்தி னின்று
மருவுறுவெண்மைவாய்ந்த வான்முளை முளைத்த காட்சி
யிருமையாகாயத்தின்க ணெண்ணிலா வுடுக்கணங்க
ளுருவுற வயங்கன்மானுஞ் செறுக்களி னிடங்க ளெல்லாம். (௩0)

முன்னிறம் வெளர்த்துத் தோன்றி முளைத்தெழு நாறனைத்து
முன்னெது குலத்திற்றோன்று முன்னவன் வடிவை யொத்த
பின்னவை பணைத்துமல்கிப் பெருகிமேல் வளர்ந்து பைத்துப்
பின்னைதன் கேள்வனுமப் பின்னவ னுருவை யொத்த. (௩க)

பைத்தெழு நாறனைத்தும் பறித்துப்பன் முடிகளாக்கி
மெய்த்தலைச் சுமந்து சென்று வேறய லுள்ள பல்ல
செய்த்தலைத் துய்த்துச் சேற்றிற் செறிதர நட்டார் மள்ளர்
நித்திய மியன்மார்ச்சால நியாயமுற் றேர்ந்தார் போலும். (௩உ)

இமைகளி னேம்பிமள்ள ரீர்ம்புன லருத்த வோங்கி
யமைதரு பைங்கூழ்க்கூறு யமரரை யமிழ்த்தத் தோன்றுந்
தமநிறத் தவுணரென்னத் தழைத்தசைவலங்க ளாதி
சுமைதர வுழத்திமார்க டொக்கவை களைதலுற்றார். (௩௩)

கண்ணினுக் கிகலாயுற்ற கருநிறக் குவளைகட்டா
ரொண்ணிலா முகத்திற்கூறு யுறுசலசங்கள் செற்றார்
பண்ணியல் வாய்த்தெவ்வாமாம் பன்மலர் செகுத்தார்தந்நீ
ருண்ணிழ னோக்கி மீட்டு முறுவயா வென்றயிர்ப்பார். (௩ச)

வார்ந்ததங் குழற்றெவ்வென்னு வளருஞ்சை வலங்களைந்தார்
நேர்ந்தவை யவர்காற் சூழ்ந்து நிகளபந் தனமாய்த் தட்பப்
பேர்ந்தவை யறுத்துச் செல்வார் பெருவலி யில்லார்தாமு
மார்ந்துதம் மாலியன்ற வளவுமூ றிழைப்பா ரன்றே. (௩ரு)

கடைசியர் களையனைத்துங் கட்டபிற் பைங்கூ ழெல்லா
மடைதரு காமமாதி யவகுண மொழிந்த பின்னர்
நடைபெறு சைவபத்தி நற்குணம் பொலிதன் மானப்
புடைபரந் தெழுந்து வானூர்ப் புகுவபோல் வளர்ந்த மன்னோ. ()

தங்கிய கருவுட்கொண்டு தழைத்துப்பின் முகங்கவிழ்ந்து
பொங்கொளி யிரவிப்புத்தேள் பொற்சயந் தனத்தியாக்குந்
துங்கவான் பசுமைவாய்ந்த துரகதத் தலைநிகர்த்த
பைங்கதிர்ப் பயிரனைத்தும் பணைகளி னிடங்களெல்லாம். (௩எ)

முற்றிய கதிர்கண்முற்று முடங்குவெள் வாய்க்குயங்கைப்
பற்றிமள்ளர்களரிந்து பல்வெவ்வே றரிகளாக்கித்
தெற்றிய சுமைகொண்டேகிச் செறிகளந் தாசையெட்டி
லுற்றமாதிரங்க ளென்ன வுயர்பல போர்கள் வேய்ந்தார். (௩அ)

கவையடிக் கயவாய்மேதிக் கணங்களைப் பிணையலிட்டுத்
துவைபட மிதிப்பித்தாங்குத் துற்றவை நீத்தகற்றி
நவையுறு பதடி தூற்றி நவமணி யனையசெந்நெற்
குவைகள்பற் பல* கல்யாணக் குவடுகளெனக் குவித்தார். (௩௯)

மரத்தின்கால் கொண்டளந்து மன்னவர்க் காறிலொன் றீந்
திரப்பினர்க் கையநல்கி யெஞ்சிய சகடமேற்றி
நிரப்பிலா மாடத்துய்த்து நிலவுமைம் புலத்தாரோம்பிக்
கரத்தலில் லாதுநாளுங் கவினவாழ் குடிகளெங்கும். (௪0)

வேறு.

இன்னசெந்நெலி னிருவளஞ் சேர்க்குநராங்கே
மன்னுதீங்கழை வட்டுகளமைக்குந ராங்கே
பன்னரம்பையின் பலனனி கொள்ளுந ராங்கே
துன்னுகந்திதெங் கின்பலந்தொக்குந ராங்கே. (௪௧)

ஆலையிற்புடை கழையின்சாறட்டிடு புகையுஞ்
சோலையிற்கனி கனிதரச் சூழ்ந்திடு புகையுஞ்
சீலவேள்விவாய்ப் புகையுமே சேர்ந்துவிண் ணிற்கார்
போலுலாவலா லவணறு பொழுதுமோர் பொழுதே. (௪௨)

அங்குழத்திய ரழைப்பது கற்பதாமரையே
யங்கணன்னவர் கண்ணெழில் கற்பதாமரையே
யங்கவர்க்கிடு கவயவங் கொடியதாமரையே
யங்கவர்க்கழ கதிலரம்பையர்க டாமரையே. (௪௩)

நெய்தல்.

நீரலாதுல கியலமை யாதென நிகழ்த்தும்
பேருலாவிய பெரும்புகழ்க் குடதிசைப் பூலன்
சூருலாவுறு கோடுடைச் சுறவமூர்ந் தென்று
நாரமூறுதுமெய்ந் நண்பொடு புரப்பது நெய்தல். (௪௪)

* கல்யாணக்குவடு - மேருமலை.

நானிலத்திற்கீழ்த் தென்னெலன் னெனக்கழி நெய்தன்
மேனிலங்கண்முன் றையும்பொருள் வளங்களின் வென்ற
தானிறுத்திய வெனப்பொலி கொடிகொள்கூம் படர்ந்த
கூனுவெந்நுடை வங்கங்கள் புறப்பல குலவும். (சரு)

புன்னை வாய்முதி ரரும்பர்கள் புணரியி னிடைவீழ்ந்
தன்ன வார்திரை கொழித்திடு முத்தொடு மலைவ
மன்னும் வேற்றுமை யுணர்கிலர் பரத்தியர் வாரித்
துன்னு கோவையின் மென்மையால் வன்மையாற் றுணிவார். ()

தாழை வெண்மலர் நிழல்கழி தன்னுளே தோன்ற
வாழு மீன்கணம்பகமென வெருண்டுகீழ் வைகி
யாழ்கலாதுமேற் றிரிதர வுண்மையாய்க் கரைமேற்
ருழு கொக்கெளி தார்ந்தயற் கொக்கினிற் சாரும். (சஎ)

சீரி ணுங்கிய பரதவர் திமிலடாத் தொலியுஞ்
சாரு நீள்வலை வீசுபு சபரங்கொள் ளொலியும்
வேரி வார்குழற் பரத்தியர் விலைபக ரொலியும்
வாரி வாயெழு மொலியினை வாரிவாய்ப் பெய்யும். (சஅ)

பாலை.

ஈந்து நெல்லியு மிருப்பையு நெருங்குபூம் பாவை
யேந்தி நின்றிடு குரவமு மிலவெனுங் கோங்குங்
கூர்ந்து கொற்றவை கோட்டங்கொண் டாண்டிட வன்மை
சார்ந்த பாலையுந் தனித்தனிப் பொலியுமாங் காங்கு. (சகூ)

திணைமயக்கம்.

மலைக்கறிக் கொடிதாய்ப் பூத்த வனப்பலா சினைவளைந்து
மலைக்கர சளித்த பாவை மகேசனைத் தழாறேற் றுங்கா
னிலத்தபன் முல்லை வெற்பி னீண்டகாரகிலைச் சூழ்ந்தந்
நிலத்தகோவியர் கார்வண்ண நிமலனைச் சூழ்வுணர்த்தும். (ருo)

வரைப்படர் வள்ளிவல்லி வலத்துநீர் மருத மல்லற்
றரைப்படு வயலை யென்னுந் தண்கொடி யிடத்துந் தாவ
நிரைத்தபூம் புனமுருக்கு நிற்றலெம் முருகன் வல்லி
யுரைக்குயர் தேவ யானை யுறத்தழீஇ நிற்றல் காட்டும். (ருக)

மீலயுளா ரெடுத்தெறிந்த வட்டச்செந் தேத்திருனு
மலையெடுத் தெறிந்த கைதை யலரின்வெண் மடலுந் தெண்ணீர்
நிலைதடத் தம்பு யங்க ணிலவிய வேந்தி நிற்றல்
சிலைகொடோள் வீரவாகு தேவர்கைப் பொலிவு தேற்றும். (ருஉ)

உதிமரன் கிளையடிக்கணுறமுறிர் திடைக்குறுக்காய்ப்
பதிதர வீழ்ந்த வேரற் பாங்கிரு கடையு நீறு
பொதிதரு காய்கடுங்கப் பொறுத்துறல் இவற்பிரண்டை
யெதிரில்காவரச்சுமந்த விடும்பனுர் நிலைமை நாட்டும். (ருங)

கார்த்திகைக் கொடியுங் கானக் காரவல்லியும் பூம்பண்ணை
வார்த்தலத் தெழுந்த நாக வல்லியு நெய்த்ற் றெண்முந்
நீர்த்திரை யிடைப்படர்ந்த நீடுகிர்க் கொடியு நாற்பாற்
சேர்த்தவற்றன்மேந் சேவல் சேய்கொடி மரத்தேர்மிதேற்றும். ()

இன்னபல் வளங்க டொக்க வெழின்மிகு பாண்டி நாட்டி
னன்னலம் புனைந்துரைக்க நாகர்கோன் றனக்கு மொல்லா
தென்னின்யா முரைப்ப தென்னே யெவற்றினு முயர்ந்த கோட்டூ
ரென்னுமா தலத்தின் சீரு மியன்றவா விசைக்க லுற்றும். (ருரு)

நாட்டுப்படலம் - முற்றிற்று.

ஆகப் படலம் உ-க்குச் செய்யுள்-அ௦.

---

# திருநகரப்படலம்.

உலகெலா நிறைந்த வுயிரெலா மின்புற் றுய்குவா னெட்டு நான் கறனுஞ், சலமிலா தாக்குந் தாமரைச் செங்கைச் சவுந்தர நாயகி யொடுசேர்ந், தலகிலாக் கருணை சுரந்தடி யவரை யாளகத் தீசனுர் பதியாய், நலமெலாங் கொண்டு பற்பல நகர்க்கு நாயக மானது கோட்டூர். (க)

கயிலைநேர் திறுவப் பொதியிலை யடைந்த கடமுனி சிருங்கமா முனிவ, னயில்வடி வேற்கை நிடதர்கோ னுதி யரசர்கள் பற்பலர் பராவிச், செயிரறு தரும மாதிநாற் பொருளுந் திகழ்தர வங்கையி னெல்லி, யுயர்வுறு கனிபோற் கண்டுபெற் றிடுசீ ருற்றது நற் றிருக் கோட்டூர். (உ)

ஐயமுற் குற்ற மூன்றுமோவுறப்பே ரகத்திய முதலிலக் கணமுஞ், செய்யபல் லிலக்கியங்களுந் தெளிந்து சிவபெருமா னினு முயர்ந்தோர், தெய்வமின் றென்னு நான்மறைத் துணிபு சிந்தையுட் குடிகொளக் கொண்ட, பொய்யறு சரிதைப் புலவர்தங் கழகம் பொலியும்வாழ்வுள்ளது கோட்டூர். (ங)

புறநகர்.

மாடையி னுருவாய் வயங்குமைந் தருக்கள் வண்டுணு நறுமல ரின்றிக், காடெனு நின்ற வெனவிகழ்ந்து ககனவூ ரார்நித மடைந்தே, யீட்று தவத்தி னகத்தியற் கருளு மீசனைப் பூசனை புரிவான், கோடெனுங் கரங்க ணீட்டுபு மணப்பூக் கொடுத்த ழைத்திடுவசூழ் சோலை. (ச)

கருங்குயின் படலம் பதிதர வென்றும் பணைத்தெழீஇத் தழைத்தடர்ந் தலர்த்தேன், வரும்பொழி லிரவி யுதையமோ டத்தமயமறைத் திடத்தவ மறையோர், பொருந்திரு சந்தி தடத்தினம் புயமும் பொழிமதுக் கைரவ கணமுஞ், சுரும்புசூழ்ந் தரற்ற மலர்வதா லெளிதிற் சூழ்ந்துணர்ந் திடுவரா லங்கண். (ரு)

ஒவ்வொரு வீயு மொவ்வொரு தேவர்க் குறையுளென் றுணர்ந்துதானவர்க, ளவ்விய மொடுசூழ்ந் தவர்திரு வனைத்து மள்ளுபு கொள்ளைகொண் டாங்குச், செவ்விய மற்றை மலர்மதுப் பருகித் தேன்கடம் பாலினும் வந்து, வவ்வலும் பற்றிச் செருக்குஞ்சண் பகங்கள் வலாரிபோல் வயங்குநந் தனமே. (சு)

விக்கின மனைத்தும் வேண்டினர்க் குடைக்கும் வேழமா முகத்தன்முற் றேவர்க்,கிக்குவ லயத்தி லேவரு மன்பி னிறைஞ்சியே யுடைத்திடப் படுவ, முக்கணு ரெங்கள் தாய்களே யென்னு மொய்த்திறு மாப்புமே லோங்கித், தொக்கபல் குலைகள் சுமந்திலாங் கலிகள் சூழ்ந்திலங் குறும்புற மெல்லாம். (எ)

அம்புய மலரு நீலமுஞ் செய்ய வல்லியும் பசியசைவலத்திற், பம்பிமேற் கலவிக் கமழ்மகரந்தம் படிதரு செயற்கையா னென்றும், வம்புள வாகிச் செயற்கைவாசனைகொள் வநிதையர்கூந்தலீ தெனவே, நம்புறத் தெரிக்கு மெழிலுறு தெண்ணீர் நளிர்தடம் பற்பல பொலியும். (அ)

வேறு.

உருமினுற் குமுறலா னுடை மின்னினு
னுருவின்மும் மதமழை யொழுக்கி னுயர்
தருமிடை மலையிடஞ் சார்தலாற்கடைக்
கருமுகி லுறழ்வன களிற்றினங்களே. (கூ)

துதிக்கையின் வானகஞ் சூழு மங்குலை
யெதிர்த்துறு பகையென வீர்த்துப் பற்றியே
யதிர்ப்பொடு பிழிந்துநீ ரருந்தி யானைகண்
மதிப்புற யாத்திடு வாரி பற்பல (கO)

உகக்கடைத் தோன்றுகா லொத்த வேகத்த
நகத்தினின் றிலங்கைபாய் நாகம் போன்றிடாச்
சகத்தவேழ் கடலையுந் தாவ வல்லன
வகுத்தபின் னிறப்பரி மாவளப்பில. (கக)

இரவியூர் தரவொளி ரிரத மீர்த்தெழு
பரியெழு முகங்களைப் பரித்து மொவ்வுரு
தரிலுறீஇப் பசலைபோர்த் தலைய வேகமான்
றிரையென யர்த்தமந் திரங்கள் பல்லவே. (கஉ)

நால்வகை மறைப்பரி நடப்பப் பூட்டுதேர்
மேல்வழி நடைபயில் வெய்ய தோர்சகட்
டால்விடு வையநான் காழித் தம்மினோர்
கால்வலத் தெனவசி காட்டுந் தேர்களே. (கங)

பத்தென வுரைகரு பத்தி னுக்குளே
யெத்திசைக் கடவினு மெய்தும் வென்றியே
மித்தையிலாதுறீஇ மீண்டு மேற்கொடி
தத்திய சயந்தன சாலை பற்பல. (கச)

வெற்பிரண் டேயென வீங்கு தோளினர்
விற்பயில் வாளியர் வீர வாளினர்
பொற்புறு மடற்கழல் புனைந்த தாளின
ரெற்படை வீரரொண் ணிலர்வன் கோளினர். (கரு)

போரிடைப் பாய்புலிப் போத்தை யன்னவர்
யாரொதிர்த் தமர்க்கினு மஞ்ச லில்லவர்
பாரிடை நால்வகைப் படையின் விஞ்சைக
ளோர்தரக் கற்குகல் லூரிபற்பல. (கசு)

கயரத துரகதங் கட்குவேண்டிய
நயமுறு கருவிக ளுட்டு சாலையுஞ்
சயமிகு பதாதிகைத் தாங்கு மேதிகள்
செயலுறு சாலையுந் திகழு மெண்ணில. (கஎ)

இடைநகர்.

மன்னுசெம் மணியும்வாள் வயிரமுஞ்சுடர்
துன்னுபச்சைப்நலத் துகிரு நீலமு
மின்னொளி விரிதர வெறுக்கை யாற்செயன்
மன்னுசெய் குன்றுகள் வயங்கும் பல்லன. (கஅ)

விற்பொலி நுதலியர் மேவிப் பூம்பொழில்
வெற்புறழ் கணவர்தோ ளிவர்ந்து மென்மல
ரற்புறக் கைம்மலு ராற்கொய் வார்மிகு
பொற்புறு மலையர மகளிர் போல்வரால். (கக)

தூம்புநீள் குழலொடு துருத்தி கைக்கொடு
காம்புறழ் தோளினர் காளை யன்னவர்
தாம்பரி வோடுதண் டடத்துக் காமமிக்
காம்படித் தூவிநீ ராடுவாரரோ. (உ0)

கதிர்செய்வெண் ணித்திலக் காவ ணங்களும்
பொதியுமா மரகதம் புனைந்த தெற்றியும்
பதியுநீ ளொளிவிடு பளிக்கு மேடையும்
விதியில் பொன்னரமியமு மோங்குவ. (உக)

பன்னிற நவமணிப் படலங் கோத்தணி
துன்னிய யாத்திடு தோரணங்கள்வான்
மன்னவக் கோள்களை வடத்திற் கோத்தணிந்
தென்னமின் ஞெளிதரு மெங்கு மேவியே. (உஉ)

உந்துமாளிகைமிசை யுறையு மாதரா
ரந்தில்வார் குழலினுக் கூட்டகிற்புகை
முந்துசூழ் முகிலொடு மொய்த்தளாவுநுண்
பிந்துவாஞ் சலதர மென்னும் பெற்றியால். (உங)

பளிக்கினி னியற்றிடப் பட்ட மாளிகை
யொளிப்பெரு மேனிலத் துலாவிக் கந்துகங்
களிப்புற வாடுமங் கையர்மெய் * வேரறத்
துளித்திடுங் கற்பகத் துருமந் தேத்துளி. (உச)

நிதியினு மாடமே னிலத்த ரம்பையர்
சதியினர்த் தனம்விணோர் கண்டுவப்பர்மின்
கதிர்செய்கீணிலத்துமங் கையர்கள் கூத்தவண்
வதியுமாடவர்கள்கண் வைத்துவப்பரால். (உரு)

மரகதத் தரமியக் கதிரை வவ்விவிண்
டுரகதம் வெண்கயஞ் சுரபி மெல்லுவ
புரையில்கீழ் முன்றிலிற் புரவி வேழமான்
கரவிலா தினியபுற் கவ்வி மெல்லுவ. (உசு)

* வேர் - வெயர்வு.

மதிச்சிலை வேய்ந்தவெண் மாடமேவருந்
துதிப்புறு பனிமலை துணையுந் திங்களின்
கதிர்க்குலம் படிதலிற் காலுநீர்ப்பெரு
நதிப்பெருக் கொழுகுசா லவியை மானுமே. (உஎ)

ஒளித்திடு மாடமே லூடு நங்கையர்
களிப்பெர்டு கணவர்விண் கன்னி யோரையை
விளித்துநீ யாரென வினவ லும்மதைச்
சுளித்துவந் தவர்புயஞ் சுவர்க்கஞ் சேர்ப்பரால். (உஅ)

உண்ணகர்.

வேறு.

தன்னை யுண்டமிழ் தாபதன் றலமிது வென்னு
வுன்னி வாரிதி யுவர்க்குண மொழித்துநன் னீராய்
மன்னி வந்துநற் றவத்தவ னருள்பெறு வான்சூழ்ந்
தென்னவேபுடை சூழ்ந்துள திலங்குபே ரகழி. (உகூ)

உம்பர் தம்பகைக் கொளிப்பிட முதவிய வழுவாற்
பம்பு முற்கடற் பருகினன் மாமுனி யற்றன்
றன்பி னம்முனி தலமடுத் தருள்கொள்வா மெனவந்
திம்பர் நேமிசூழ் கடல்கிடந் தெனத்தகு மிலஞ்சி. (௩0)

வாவு வாளைக ளாகிய நாந்தகம் வட்டம்
பாவு மெய்க்கமடங்களாம் பரிசைபற் பகுவாய்
மேவு வன்கரா மென்னுமீர் வாள்கொடு வெய்திற்
றூவு வெம்பகை சாய்த்திடு மகழியு மங்கண். (௩க)

* சூர னுதியர் வழித்தடைத் தோமிழை வெற்பை
யார மாமலை முனிகரத் தமிழ்த்தின னற்றன்
றோரு மத்தவ னுறைதலத் தாழிவெற் பருளை
நேர வந்துசூழ்ந் தென்னவே நிலவுநீ ¶ ளகப்பா. (௩உ)

பல்ல வாகிய வன்பொறிக் கணங்களாற் பருத்த
வெல்லை யில்லன படைகளை யிறைஞ்சலர் வெருட்சி
புல்லு மாறுவீசிக்கனற் பொறிமழை பொழிந்து
வெல்ல வல்லது மேக்குயர்ந் தோங்கிய மதிலே. (௩௩)

பரத்தையர்வீதி.

உரைசெ யிந்நக ருறைபரத் தையருரு வோடு
வரைசெய் தாரியர் முன்னர்வான் மகளிருக் குறுபே
ரரைமடந்தைய ரென்றன ரதுமரூஉ மொழியாய்த்
திரைவழங்கிய தரமடந் தையரெனப் பின்னர். (௩ச)

* சூரன் - சூரியன். ¶ அகப்பா - மதில்.

நாளு மின்பிணை நல்விலைக் களித்திடு நல்லா
ராளு மல்குல்வையங்குய கயமொடு மக்க
வாளும் வெம்புருவச்சிலை யுந்தரித் துறலால்
வேளுறும்படை விடெனலாமவர் நியமம். (௩௫)

விலையினுக்கவர் விற்பரின் பொன்றனைக் கொள்வான்
மலையினுக்குயர் நிதிக்குவை வழங்கியும் போதா
துலையினுக்கிடு துண்டுல மோடுபல் பொருளும்
விலையினுக்குவிற் றிடுவர்கா முகரிது வியப்பே. (௩௬)

மாதராலுயர் பரத்தையர் மனையின்முற் சுவரி
லாதரம்பெருகப்புறக் கரணமாங் கலவிப்
பேதமுற்றுநோக் குறும்விடர் பெட்புறு மாறு
தீதறத்திகழ் சித்திரந் தீட்டிவைத் திடுவார். (௩௭)

உடையினிற்பொல னணியினி லுகளிணை விழியாம்
படையினிற்சதி தழுவிய நடித்திடு பரத
நடையினிற்குறித் திடுமிசையினிலவி நயத்திற்
புடையினிற்படு விடர்பொருள் கவர்வர்வேசியரே. (௩௮)

வேளாளர்வீதி.

நதிகளிற்றலைமைப்புகழ் நண்ணுசா னவியின்
முதுகுலத்தினி லுதித்தற முனிவிலாக் கமைமேற்
கதியினுக்குறு வழிசெயாசாரநற் கருமந்
துதிபெறக்கொளூஉ வாழ்வர்வேளாளர்க டொக்கு. (௩௯)

அனிச்ச மென்மல ரினும்விருந் தாயினர் முகநொய்
தெனத்தெரிந்தவ ருளக்குறிப் புணர்ந்துவப் பெய்த
மனத்தினைந்தன வளித்தறு சுவையவூண் மகிழ்வி
னினித்த சொல்லினோ டூட்டுப விசைகொள் வேளாளர். (௪0)

செழிய பைம்பயி ரோம்புதஞ் செயலெனப் பெம்மான்
விழிமணிப்பெரு மாலிகை வெண்பொடி போற்றி
யழிவிலாதெவற் றிற்குமே லாகிய சைவ
வழியெனும்பயி ரும்புரந் தோம்புப மகிழ்ந்து. (௪௧)

வைசியர்வீதி.

குணக்குதித்திடு ஞாயிறு குடக்குதிப்பினுமுன்
வணக்குபொற்சிலை சலிப்பினும் வாரிதி யுவர்ப்பி
னிணக்கொழிப்பினுஞ் சைவநன் னெறியினின் றென்றுந்
தணப்பிலாப்பெருஞ் செல்வர்கள் வைசியர் தாமே. (௪௨)

உம்ப ரேத்துகோட் டூரில்வாழ் வணிகராவணத்துச்
செம்பொ னீள்வில யீந்துகொண் டன்றுகொ றினமுந்
தம்பதம்புகு நித்திய சூரிக டமக்கவ்
வம்புயாதனி கேள்வர்பீ தாம்பர மளித்தல். (சஙு)

கூடல்வாயொரு மதிக்குலச் சேய்முடி கொள்வான்
மாடுவந்திவர் வணிகன்முன் கொடுவந்த மணிக
ளேடலர்ந்தபூந் தடங்கொள்கோட் டூரில்வா ழிப்பர்
மாடுறத்தனக் கணிந்தநின் மாலிய மன்றோ. (சச)

நிச்ச லுந்தன வணிகர்நன் னெறியினில் வரவு
மெச்சமில்செல வுங்குறித் தெண்கணக் கிடுவார்
பொச்சமற்றவெண் பூதிகண் மணியணிந் தேறே
றெச்சனேந்தெழுத் துங்குறித் தெண்கணக்கிடுவார். (சரு)

அளகையாளும்வைச் சிரவண னடைந்தநன் னிதியு
மொளிசெய்மாமுடி யும்பர்கோ னுற்றபன் னிதியு
நளனிறைஞ்சுகோட் டூருறை நாய்கர்தந் நிதியை
யளவுசெய்தலுக் குற்றசிற் றளவைக ளாமால். (சசு)

அரசர்வீதி.

முன்றிலெங்கணு முடிபுனை குறுநில மன்னர்
வன்றிறத்ததந் தாவள் மிசைகொடு வந்து
நின்றுவப்பொடு மளந்திடு நிதிக்குவை பல்பொற்
குன்றுறைந்தெனத் திகழ்தருங் கோக்கள்வாழ் மறுகில். (சஎ)

வானின்மேவிய வைந்தருக் குலங்களும் வனச
மூனமில்வளை யெனுமிரு நிதிகளு முலவாத்
தேனுவுந் * தரும் பொருளையந் நகரின்பார்த் திபர்பாற்
றூன முற்றதாற் றூனமுற் றனவென்ப ரவற்றை. (சஅ)

ஆறிலொன்றெனுந் திறைப்பொரு ளளந்திடு மொலியு
மாறுகொண்டவர் தோற்றடி வணங்கிவாழ்த் தொலியுங்
கூறுமாதுலர்க் கூயழைத் திடுமுர சொலியு
மாறிலாதன மன்னர்தம் மாளிகை வாயில். (சகூ)

அந்தணர்வீதி.

பல்ல வாகிய பசுக்களை நாடொறும் படுத்தும்
புல்ல வொண்ணுறு வெய்யமுத் தீத்தொழில் புரிந்து
மொல்லு மாமறை யுரைவலி யுடைமையானவற்றை
நல்ல வாக்குமந் தணர்பலர் வாழ்வரந் நகரில். (ருO)

* தரும் - கொடுக்கும். செய்யுமென்முற்று.

செய்ய வேதியர் செய்புநல் வேள்வியி னெழுந்த
துய்ய தாம்புகை வானவர் நாட்டினிற் சூழ்வுற்
றைய வாங்குளார் மெய்ப்புரி சித்தலர் னன்றே
பொய்யி லாயுள்பெற் றமரராய்ப் பொலிந்தன ரவர்கள். (ருக)

ஈத லேற்றலே வேட்டல்வேட் பித்திட லேநூ
லோத லோதுவித் திடுதலே யெனவெடுத் துரைக்கு
மாதி யாயவவ் வறுதொழி லந்தணர் வயத்தன்
றீதி *ஐந்தொழி லந்தண னியல்பது தேரின். (ருஉ)

வேறு.

விதிவிலக் கினைவகுத்து விரித்துரை பொதுச்சிறப்பாஞ்
சதுர்மறை யாகமங்கள் சகலமுந் தெளிந்தெவர்க்கும்
பதிசிவ பெருமா னென்றே பரார்த்தத்து மான்மார்த்தத்துஞ்
சதியில்பூ சனைசெய்யாதி சைவர்வாழில்ல மோர்பால். (ருங)

தூயமெய்ச் சரியை யாற்றுந் துகளிலா ருறையு ளோர்பான்
மேயநற் கிரியை மார்க்க விதியினு ருறையு ளோர்பா
லோயகத் தினரா யோகி னுறைந்தவ ருறையு ளோர்பான்
மாயமென் றுலகைக் கண்டு மாய்விலா ருறையு ளோர்பால். (ருச)

ஆதிநாயகன்றன் வாக்கா னறம்பொரு ளின்பம் வீடாந்
தீதுறுப் பொருள்க ளுன்குஞ் சீவர்முற் றுய்யும் வண்ணங்
கோதிலாக் கருணை பூத்துக் கூறிய மெய்ம்மை யாய
வேதமா ணவர்கட் கோதும் வித்தியா சாலை யோர்பால். (ருரு)

பொன்னினிற் சீர்த்த சூபம் புதியமென் கறிவருக்கம்
பன்னிய வபூப பேதம் பாயச முப்பழந்தே
னுன்னிய ததிபா னேய மொடுமென்பிற் றாய சாலி
யன்னமெவ் வெவர்க்கு மென்று மருத்துசத் திரங்க ளோர்பால். ()

குதலையின் னமுத மூட்டுங் குழவிக ளில்ல மெங்கும்
விதமுறு மியங்க ளெங்கும் விழாக்களே வீதி யெங்கு
மதிர்தரு முழவ மெங்கு மணிதிக ழரங்க மெங்கும்
புதியமங் கலங்க ளெங்கும் புகல்வதென் னினியா மன்னே. (ருஎ)

பூங்கதிர் மணிக்கணங்கள் பொன்னினிற் குயிற்றப் பெற்றுப்
பாங்குறு மமர சிற்பர் புலருமுள் வியக்கும் வண்ண [ன்
மோங்குசெங் கேழ்கொள் கோடி யுதயமார்த் தாண்ட ரைப்போ
ருங்கோளிர்ந் திலகு நங்க ளகத்தீசர் வாழ்பூங் கோயில். (ருஅ)

* ஐத்தொழிலந்தணன் - சிவபெருமான்.

உருப்பொலி விடைக்க டாங்கி யுயர்மதி லமரர்த் தாங்கும்
பொருப்புறழ் கோபுரங்கள் பொன்விமானங்கள் சேர்த்த
கருப்பவின் மணிகுயின்ற கவினத்த மண்டபங்க
ளிருத்துமா மண்டபஞ்சூழ் தேவராலயங்க ளோங்கும். (ருக)

சேவுயர்த் தவன்மெய் வாக்காந் திருமறை யொலியுந் தூய
மூவர்பா வொலியும் வாத வூர்வரு முனிவர் வாக்கின்
பாவின வொலியுங் கண்டை பல்லியத் தொலியு மொன்றித்
தாவிலா தென்று மில்கிச் சந்நதி விளங்கு மன்னோ. (சூ0)

இன்னசீ ராலயத்து ளிலங்குமந் தாரநீழ
றன்னிகர் கருணை மல்குஞ் சவுந்தர நாய கிப்பே
ரன்னமொடமர்ந்து நங்க ளகத்தீச னெந்த ஞான்று
மன்னிய வரசு செய்து மகிழ்ந்துவாழ்ந் திருக்கு மாதோ. (சூக)

திருநகரப்படலம் - முற்றிற்று.

ஆகப் படலம் ௩-க்குச் செய்யுள்-கசக.

## நைமிசப்படலம்.

மைமிசை குழல்வளை மடந்தை பாகனை
மைமிசைந் தொழுகிய வம்புயச் சரண்
கைமிசை மலர்கொடு கருது யோகர்வாழ்
நைமிச வளஞ்சில நவிலு வாமரோ. (க)

வாழைமாங் காரமந் தார மாதுளை
தாழைசண் பகம்வழை நாகஞ் சான்மலி
மாழை பிப்பிலம்பலா மகிழசோகதி
வேழிலைம் பாலையு மிவரு நைமிசம். (உ)

மாற்றரு முப்பகை மறுத்து மாதுவாழ்
கூற்றினர் பதமலர் குறிக்கு மாதவ
ராற்றிய வேள்விவா யமுதி னண்டர்க்குத்
தோற்றுறு பசியினைத் துடைக்கு நைமிசம். (௩)

ஆதியு நாப்புணு மந்தமும்மெழி
லோதிம முவணமே றாறு மூவராய்
மீதுயர் பிப்பிலச் சினையில் வேதநான்
கோதிடு சுகங்கள்வா ழுறையு நைமிசம். (ச)

அனல்குளம் பொலிதலா லால மேவலா
னணிமதி புனைதலா னவ்வி தாங்கலான்
மனனமர் யோகனா மரீஇக் கலத்தலாற்
சினவிடைப் பாகனைச் சிவனு நைமிசம். (ரு)

பூந்துள வமைதலிற் புயங்க மேவலி
லேய்ந்தவான் றொடர்தலி னிலேக ருண்ணுமாத்
தேர்ந்தவி யளித்தலிற் றிகிரி தாங்கலிற்
சேந்தகண் முகுந்தனைச் சிவனு நைமிசம். (சு)

வல்லநூல்வாயொலி மறைவழங்கலா
னல்லதாமரைமிசை நயந்திருத்தலா
லெல்லியமெலகினமீ திவர்ந்து தோன்றலாற்
புல்லுறு பிரமனைப் பொருவு நைமிசம். (எ)

சொல்லுமிவ் வனத்திடைத் துன்னலார்விடும்
வல்லிய வதள்புனை வாம தேவனைப்
புல்லிய மனத்தினன் பொருவி லேந்தெழுத்
தெல்லையி லன்பொடு மியம்பு நாவினன். (அ)

வெண்பொடிப் புண்டரம் விளங்கு நெற்றியான்
கண்மணிக் கண்டிகை கவினப் பூண்டுளான்
பண்புடை நுதிக்குசை பரப்பிருப்பனு
மெண்படு மாதவத் திலங்கு சூதனே. (கூ)

காசிபன் முற்கலன் கௌதமன் றுரு
வாசனன் மவுற்கலன் வதிட்டனொடங்கி
வேசியன் சுகன்சம்பு வீதி கோத்திரி
கோசிகன் பிருகுவெண் கோண மாமுனி. (க0)

சௌனகன் முதலிய தவத்தினுய்
ரவிர்சடை முனிவர ரடைந்திறைஞ்சியச்
சிவபரனேயெனச் சிந்தையிற்களி
யிவர்தரத் துதிபல வியம்பினாரரோ. (கக)

பின்னையச் சூதனும் பெட்பி யாதென
மன்னிய முனிவரர் மகேசனுருறை
யுன்னருந் தலங்களு ளுயர்ந்த தெத்தல
மன்னதன் மான்மிய மருள்க வென்றனர். (கஉ)

மாதவ ரின்னணம் வணங்கி வேண்டலும்
போதக வதள்புனை புனிதன் வாழ்வதோர்
மூதல மான்மியம் வகுப்பல் கேண்மெனு
வோதியத் திசைதொழு துரைத்தன் மேயினன். (கரு)

வேறு.

விந்தமால் வரைக்குத் தென்பால் வேண்டலர் விடுத்த வெய்ய
தந்தமால் கரித்தோல் போர்த்த தம்பிரான் செங்கோ லேந்திச்
சுந்தர வழுதி யாகித் துலங்குறு பாண்டி நாடு
சிந்தலில் வளத்துந் தெய்வத் தலத்தினுஞ் சிறந்த தம்மா. (கச)

அத்திரு நாட்டிலீச னமர்தரு * கானப்பேருக்
குத்தர குணக்குத்திக்கில் யோசனை யொன்றிற் றேவர்
நத்தும் ‡ வே தகபுரிக்கு நாட்டுயோ சனைக்குத் தெற்கி
லொத்தலி $ லாடா னைக்கோ ரோசனை பவனன் றிக்கில். (கரு)

புகலும் ¶ பச்சிம விருத்த புரிக்கிரு குரோச மேற்கிற்
பகலவற் றெருடமந்தாரப் பழுவத்துட் பனிநீர்க்கங்கை
யிகலர விதழி தும்பை யீரவெண் மதிக்கொழுந்து
தகவில்கற்சிலையு மேந்துந் தம்பிரான் றலமொன் றுண்டால். (கசு)

விரிசலை நதிக்குத் தெற்கில் விளங்கிய மணிமுத்தப்பே
ருரைபெறு நதிக்குதக்கி னுள்ளவத் தலத்திற் றென்சொற்
குருமுனி முன்னோர் முன்னோர் கோட்டி கூடியதால் யாரும்
புரிதரு மதற்குக் கோட்டி புரமென்ப நாம மின்னும். (கஎ)

தெழித்தமுக் குறும்பு சாய்த்த சிருங்கமா முனிவ னேன்பங்
கிழைத்தவேதுவிற்சிருங்க புரமென்று மிசைப்ப நாமஞ்
செழித்தவத் தலக்குறிக்குச் சிறந்திடு மகத்தீசப்பேர்
தழைத்திடுந் தமிழ்முனிக்கோன் சார்ந்துபூசித்ததாலே. (கஅ)

மூர்த்தியாற் பொலிந்து தோன்றுஞ் சிலதல முழுகித் தோயுந்
தீர்த்தமதால்விளங்குஞ் சிலதலந் தான மேன்மை
மாத்திர முளதம் மூன்று மகிமையு மந்தாரக்கான்
க்ஷேத்திரத் துளவா லெந்தக் க்ஷேத்திர மதற்கொப் பம்மா. (ககூ)

உயர்வுற வியாதன் சொல்லீ ரொன்பது புராணந் தம்முட்
பெயர்தலில்லாத பெற்றிப் பிரமகைவர்த்தத் திந்த
நயமிகு தலத்து மேன்மை நனிவிரித்துள்ள தவ்வா
றியலுற வுரைப்பல் கேண்மி னெனப்புக லுற்றான் சூதன். (உ0)

நைமிசப்படலம் - முற்றிற்று.

ஆகப் படலம் ௪-க்குச் செய்யுள்-ககூக.

---

* கானப்பேர் - காளையார்கோயில். ‡ வேதகபுரி - மார்ற்றூர்.
$ ஆடானை - திருவாடானை. ¶ பச்சிமவிருத்தபுரி - வெளிமுத்தி.

# அகத்தியர் பூசனைப்படலம்.

உற்ற நைமிச மோதின மும்பர்க்கா
வெற்று வார்தினை யீர்ங்கட லின்புனன்
முற்ற வுண்ட முனிவரன் பூசனை
முற்றி நின்ற முறையினிக் கூறுவாம். (க)

வேரிவண்டுளவோன் விடை யாயினு
னூரி பாகற்கு நண்பொடு மென்றுபால்
வாரி வந்து வதிந்தது போன்மெனுஞ்
சீர தாகித் திகழுங் கலையே. (உ)

அன்ன வான்கயி லாயத்தத் தாணியின்
மின்னோர் பாகம் விளங்குற வேதனு
மன்ன னேடி யறிதற் கரியதாம்
பொன்னின் மாமுடிப் புங்கவன் வைகினான். (ங)

அண்டர் நாத னரியய னாதிய
தொண்டர் யாருந் துவன்றிவந் தக்கணி
கொண்ட நாதன்வெண் கூனெயிற் றேனமுன்
கண்டி லாப்பதங் கண்டுகை கூப்பினார். (ச)

போற்றி நின்ற புலவர்தம் வேட்கையைச்
சாற்றத் தந்தவர் தம்பதி சார்ந்தபின்
னேற்ற மாமிம யர்சல வேழைக்குக்
கூற்றி னார்வலி கொன்றவன் கூறுவான். (ரு)

என்றன் கண்க ளிமைமுகிழ்ப் புற்றிடிற்
பொன்று முண்மை புவன மனைத்துமஃ
தன்றி நோக்க மலர்ந்துள வாமெனி
லொன்றி யாவுமுண்டாமென வோதினான். (சா)

என்ற மாற்ற மிறைவ னியம்பலு
மன்ற துண்மை யறிதுமென் றம்பிகை
மன்றன் மாமலர் மானு மகங்கையா
னன்றி ராப்பக னாட்டுகண் பொத்தினாள். (எ)

அக்கணத்தி லதன்புவி வான்முதற்
றிக்கனைத்துஞ் செறிந்தது காரிரு
டொக்கபல்லுயிர்த் தோற்றங்கள் யாவுங்கூர்
துக்கமுற்று தொழிலற் றுயங்கின. (அ)

மண்ணு ளர்ரு மயக்கமுந் றேங்கினர்
விண்ணில் வாணரு முண்டி மெலிந்தன
ரொண்ணி லாரவி யோட்டமு முற்றன
வெண்ணி லாத்துய ரெய்தினர் யாவரும். (கூ)

மங்கை யீசன் மலர்க்கண் புதைத்தநாட்
சங்கை யோர்கணஞ் சங்கரர்க் கேனைய
வங்கண் வானவர் மானவ ராதியோர்
பங்க மெய்துறப் பல்லுக மானவால். (க0)

அந்த வேலையி லம்மலைச் சென்னிமீ
துந்தி நீண்ட வுயிர்க்குயி ராயின
னிந்த வின்னலென் னென்று சினக்கவோர்
தந்த வேழ மின்றுய்கர நீக்கினுள். (கக)

பஞ்சின் மெல்லடிப் பாவை கரங்களாங்
கஞ்ச நீத்தபின் காசினி வான்முதல்
விஞ்சி மூடிய வெவ்விருள் வீந்தது
நஞ்ச முண்டவ னுட்டந் திறந்ததால். (கஉ)

அன்ன காலையி லம்மையை நோக்கியாஞ்
சொன்ன மாற்றநீ சோதனை செய்ததா
லின்ன லெய்திய தெவ்வுலகங்களு
மென்ன பாவமீ தென்றுருத் தோதுவான். (கங)

சொல்லு மிப்பிழை தோன்றிய துன்றனு
லல்ல தொன்றிலை யாதலி னுற்றல்சா
லல்லுண் மெய்புடை யையையா கென்றுபொற்
கல்லை வில்லெனக் கண்டான் சபித்தனன். (கச)

கூறு மாற்றமக் கோதை செவிக்கொளா
வேறு மாற்றம் விளம்பிலள் வேளது
வீறு மாற்றிய வெள்விடையோனிடக்
கூறு மாற்றலை யுன்னிக் குழைந்தனள். (கரு)

பின்னு நாயகன் பெய்கழற் பங்கயஞ்
சென்னி சூடியித் தீய வுருக்கழீஇ
மன்னி யுன்னிடம் வாழ்வதென் னுளென
மின்னி னுண்ணிடை யாண்மிக வேண்டினள். (கசு)

வரைமடந்தை வணங்கலு நம்பரன்
றிரைமிடைந்த புவியிடைச் சென்றுபூ
விரைமிடைந்த வியன்பொழிற் கானப்பேர்
புரைமிடைந்தநீ போதுகென் றோதுவான். (கஎ)

ஞானப் பேர்நல மோக்கமு நல்குமக்
கானப்பேரெனு மூரிற் கடிதடைந்
தீனப் பேர்நிரப் பேனவுந் தீர்த்திடு
வானப் பேரன்பினூற்றுதி மாதவம். (கஅ)

செய்திநோன்பவண் சில்பகல் செல்லவிம்
மைதிகழ்ந்த வடிவம் விடுத்தொரீஇப்
பைத லின்றிப் பசும்பொனின் மேனிபெற்
றைதிகழ்ந்தசு வணிவல்லி யாகுவாய். (கக)

ஆய வக்கணத் தண்டரயன்முதற்
றூய நற்றவ யோகர்கள் சூழுற
வேயை வென்று விளங்குமென் றோளினுய்
நேய மிக்க மணவினை நேர்குவாம். (உ0)

நலங்கொண் மங்கல நாண்வினை முற்றியாந்
துலங்கு மந்தத் தலத்திடைத் துன்னுவாங்
கலங்க லேலெனக் கார்மிடற் றண்ணலே
வலங்கொண் டேத்தியம் மாதுமை நீங்கியே. (உக)

மன்னு பல்லுயிர் தந்து வளர்த்திடு
மன்னை நோன்புசெய் தற்கக மாகிய
தென்ன னாட்டவர் செய்தவ மென்கொலக்
கன்னி மாதவண் சாரக் கருதினள். (உஉ)

கருது மேகங் கருக்கொண் டெழுந்தெனப்
பருவ மேனி பசப்புறப் பான்மதி
யிருபிளப்பி னிலங்கெயி றேய்ந்துசெங்
குருதி யொக்குங் கொழுஞ்சிகை கொண்டனள். (உ௩)

தாளில் வார்சிலம் பார்ப்பத் தயங்குமெண்
டோளி லம்பொற் றொடியணிந் தாற்றல்சா
லாளி மீதிவர்ந் தேகின ளன்னைமா
காளி யாகிக் கணங்கள்கை சூழ்வர. (உ௪)

ஓர்பகலரவுதிங்க ளுறவுகொண் டுலாவு வேணிச்
சார்பகலாதுதண்ணஞ் சானவி தரித்த பெம்மா
னேர்பசுந்தோகையன்ன நிமலையந்தரியி னோடு
கார்பரந்துலவு மன்றல் கமழுமுய்யானஞ் சார்ந்தான். (சா)

நந்தனவளங்களெல்லா நாயகனென்னையாளுங்
கந்தனைப்பயந்தகன்னி களிப்புறக்காட்டிப் பின்னர்ப்
பைந்தளிர்பொதுளப் பூந்தேன் வார்ந்திடப் பணைத்துநீண்டு
கொந்திணர்குலவிமல்கோர் கூவிளந்தருக்கீழுற்றான். (எ)

அத்தருநிழலின்கண்ணே ராய்மணித்தவிசின்மீது
முத்தலைச்சூலபாணி முகிழ்முலைமுத்த மூரற்
புத்தமுதனையதீஞ்சொற் புரிகுழற்பூவையோடு
தத்தமிலுவகைபூத்துத் தனித்துவீற்றிருக்குங்காலை. (அ)

மங்குலூர்*மாலூரத்தின் மடமுறு முசுவொன்றேறித்
தங்குலமுரண்குணத்தாற் றளிர்பலபறித்துப் பெம்மான்
றிங்கள்பொன்னிதழிதும்பை திகழ்தருசடிலமீதுங்
கங்குனேர்குழலிமீதுங் கணக்கறவுதிர்த்ததன்றே. (கூ)

என்னைகொன்மாலூரத்தி னீர்ந்தளிருகுவ வென்று
முன்னியண்ணாப்புற் றந்தநகச்சினைமுசுவைக் காணூஉப்
புன்னகைபுரிந்து சற்றும் போதமில்லாத விந்தச்
சின்னவன்கடுவன்செய்யுஞ் †சேட்டையென் றுவந்தானன்றே. ()

பசுபதிபின்னரந்தப் பணைத்தகூவிளத்தில் வைகு
முசுவினையினிதுநோக்கி முகமலர்ந்தழைப்ப வெய்திற்
சிசுமதிமகிழ்ந்துதாய்பாற் சேறல்போலச்சமின்றி
வசுபதியாகுமூழால் வந்துமுன்னின்ற தாங்கே. (கக)

முன்னுறுமுசுவைநோக்கி முக்கணனருளானன்பு
துன்னறிவின்றியேனுந் தூயகூவிளத்தி னின்று
நன்னர்மெல்லிலையாற்பூசை நயந்தனைபோலுநம்மை
யன்னதற்கவனியாளு மரசுனக்களித்தோ மென்றான். (கஉ)

என்றிறையருளயூக மேய்ந்தபேரறிவு பெற்றுத்
துன்றியவன்பினோடு துணைப்பதம்வணங்கி யைய
வென்றிருக்கைலைச்சார லுற்றுவந்துறைதல் விட்டுச்
சென்றுபூதலத்தையாள றீதெனச்செப்பிற் றம்மா. (கங)

* மாலூரம் - வில்வமரம். † சேட்டை - தீக்குணச்செயல்.

இயம்புமம்முசுவைநோக்கி யிரும்புவிமுழுதுஞ்சின்னு
ணயம்படவரசுசெய்து நாட்டுமுப்பொருளு மெய்தி
வயம்புகழ்நிறுவிப்பின்னர் வருதிநங்கைலைக்கென்னுப்
புயங்களிற்புயங்கமாலை பூண்டருள்புனிதன் சொற்றான். (கச)

ஐம்முகனவ்வாறோத வடிபணிந்தைய விந்தச்
செம்மையிலுருமனித்த வுருவெனத்திரிதல் வேண்டு
மும்மலர்ப்பதத்தையென்று முன்னற்குக்குறியதாக
விம்முகமிருத்தல்வேண்டு மெனமுசுவேண்டிற் றன்றே. (கரு)

இப்பெருவரங்களீந்தோ மிரும்புகழ்தேசு மேன்மை
துப்புறுவாய்மை சான்ற சூரியகுலத்திற் றோன்றி
யெப்புவனத்துளோரு மிறையெனவணங்கப் பெற்றுச்
செப்பமிக்குடையனாகித் திகழுதியென்று பின்னும். (கசு)

பசுகுந்தமேறிக்காத்த பால்விடையண்ணல் கையில்
வசுகுந்தமேந்தினனவ் வளம்பெறுயூகத்திற்கு
முசுகுந்தனென்னநாம மொழிந்துநல்விடையுநல்கி
யசுகந்தமடியர்க்கூட்டா வமலையோடடைந்தான்கோயில். (களை)

அன்னமாயூகம்பின்ன ராதவன்குலத்துமெய்மை
மன்னரிச்சந்திரன்றன் மரபினிற்றோன்றி மாண்பிற்
பொன்னரிமகுடமேந்திப் பூங்குடைநிழற்றச்செங்கோன்
மன்னனாய் * வஞ்சியென்னும் வளநகர்த்தலைமை பூண்டான். (கஅ)

சிவனருள்வரத்தாலன்னான் சேண்முதலெட்டுத்திக்குப்
புவனமும்புயங்களுரும் புகுந்திறலுடையனாகிக்
கவனமாகரிதேர்காலாட் கடற்படைபலவும்பெற்று
நவநரபதியாயெங்கு நல்லறம்வளர்க்கு நாளில். (ககூ)

அங்கண்வானகத்திற்றேவ ரரம்பையரடிநின்றேத்தச்
சங்குதாமரையுமானுந் தருவைந்துமேவல்கேட்ப
வெங்கணான்மருப்பு நால்வாய் வேழமூர்தலைவனோடு
செங்கண்வாளவுணரேற்றுச் செருமிகவிளைக்கலுற்றார். (உ0)

அரிகளாமசுரர்பொங்கி யடன்மிகுந்தமரூரிற்
புரிசமர்க்குடைந்துவெள்கிப் புலவர்கோன்வெரிந்தந்தேகித்
துரிசறவுணர்ந்தகேள்விச் சூழ்ச்சியிற்றேராசானை
யருகுறவழைத்துத்தெவ்வ ரழியுமாவாய்தலுற்றான். (உக)

* வஞ்சி - கருவூர்.

இப்பகைகடப்பதெவ்வா றியாருளாரிவரோ வெல்லுந்
துப்புடையரசரேவர் சொல்லுதி துணைவிலென்ன
மைப்புயனூர்திகேட்ப மந்திரமுறையுநூலுந்
தப்பறவுணர்ந்தபொன்னன் சாற்றுவல்கேட்க வென்றான். (உஉ)

உப்புநீருததியாடை யுலகொருகுடையிற் காப்போ
னெப்பெரும்புகழும்வாய்ந்தோ னெளிமையர்க் குதவுஞ்சேம
வைப்பினன் முசுகுந்தப்பேர் வாய்ந்தவன் வலியராய
விப்பகைகடக்கவல்லா ரிவனன்றி யேவருள்ளார். (உங)

கராசலவுரிவைபோர்த்த கண்ணுதற்கடவுள் பாதம்
பராய்வரம்பெற்றவாற்றாற் பாதலந்திறக்க மெங்கும்
விராய்வருந்திறலா னந்த வேந்தனை வேண்டுவாயேல்
வராதிரானெனவியாழன் மகபதிக்குரைத்தானன்றே. (உச)

மற்றவனுரைப்பக்கேட்டு மாற்றலர் தம்மையின்னே
செற்றனமெனமகிழ்ந்து செறிகழலரசர்கோவை
யுற்றிரந்தழைத்துவம்மி னெல்லையிலென்றுதூது
பொற்றடவிமானத்தோடும் போக்கினனமரர்வேந்தன். (உரு)

ஒற்றர்மண்ணுலகத்தெய்தி யொன்னலர்ச்செருக்கவல்ல
விற்றிறன்முசுகுந்தப்பேர் வேந்தனையண்மிவானோர்க்
குற்றுளவலந்தையாவு முரைத்தடலசுரர்தம்மைச்
செற்றுவிண்புரத்தல்வேண்டு மென்பதுந்தெரித்தார்மன்னே. ()

நம்மையோர்பொருளாத்தெய்வ நாயகனயந்ததாலவ்
வெம்மைசெய்யசுரர்த்தேய்த்து மீள்வதுகருமமென்னச்
செம்மைகொளரசர்கோமான் சிவபிரான்மலர்த்தா ளுன்னித்
தெம்முடிதுமிக்குந்தெய்வத் திறற்படைபலவுந்தாங்கி. (உஎ)

குண்டலங்கவசமாதிக் குருமணிப்பணிகள் பூண்டு
மண்டலத்தலைவன்றெய்வ மானமீதிவர்ந்துவெய்தின்
விண்டலம்புகுந்துதேவர் வியப்புறீஇக்குழுமிச் சூழக்
கொண்டலூர்குரிசில்வைகுங் கோச்சவைகுறுகினனால். (உஅ)

சவையுறுமரசன்றன்னைச் சததச கமலம்போலு
நவையறுநயனனோக்கி நயந்துபன்முகமன்கூறிச்
சிவையுறுகனலிற்பொங்குந் தயித்தியர்ச் சிதைத்தியென்னக்
கவையுறுசிந்தைகொண்ட கடவுளர்தலைவன் சொற்றான். (உகூ)

என்றவனுரைத்தமாற்ற மிருசெவிக்கமுதமாக்கிக்
குன்றெறிகுமரனன்ன கோமுசுகுந்தன்போர்க்குச்
சென்றனன்றேவர்சூழ்ந்து செறிந்தனர்முரச மார்ப்பத்
துன்றியவொலியாற்றெவ்வர் துண்ணெனவெதிர்ந்தார் மன்னோ.

எதிர்த்துவல்லசுரர்சீறி யிருவிசும்பெட்டுத்திக்கு
மதிர்த்தனர்புயங்கள்கொட்டி யார்த்தனர்புலிங்கங் கண்ணின்
றுதிர்த்தனர்வின்னாணேற்றி யூழியினெழுநாவென்னக்
கொதித்தடல்குறித்துப்போரிற் குதித்தனர்கூறலுற்றார். (௩௧)

நென்னலெம்போரிலேற்று நெளிந்தடலிழந்தநீவி
ரென்னைகொன்மீண்டீர்நுங்கட் கிறுதிநாளின்றுபோலும்
பொன்னகரினியெங்கட்கே போதுமீதுண்மையென்னாப்
புன்னவையானமாற்றம் புகன்றுபோர்புரியலுற்றார். (௩௨)

வல்லயிலுலக்கைதண்டம் வளைதடிசுரிகைநேமி
வல்லயமுதலாயுள்ள வன்படையசுரரேவ
வொல்லையிற்புலவர்கோமாற் குறுதுயரொழிக்கவந்தோன்
வில்லுமிழ்கணையாலந்த வெம்படைவிலக்கினானல். (௩௩)

விலகலில்சினமீக்கொண்டு வெந்திறலசுரர்மீட்டும்
பலபலபடைகளேவிப் பண்ணவருடலுந்தோளுங்
குலமுசுகுந்தன்மார்புங் குருதிகொப்புளிக்கநெஞ்ச
நிலைகுலைந்தயரும்வண்ண நெடுஞ்சமருழந்தாரன்றே. (௩௪)

வானவர்வருந்தல்கண்டு மன்முசுகுந்தன்சீறித்
தானவருடலையீண்டுத் தனித்தனி தடிந்துவீழ்த்திச்
சேனமோடலகையுண்ணச் செய்வலென்றொருவில்வாங்கிச்
சோனையம்புயலையொத்துச் சொரிந்தனன்கணைகளம்மா. (௩௫)

தோள்சிலர்துணிந்துவீழ்ந்தார் சுடுசரம்பாயச்சில்லோர்
நீள்கழற்கழல்களற்று நிலைதபவுருண்டார்சில்லோர்
வாள்கதையோடுகையு மகுடமுமிழந்தார்சில்லோ
ராள்வலியிழந்திவ்வாறு யசுரர்கண்மடிந்தாரன்றே. (௩௬)

தயித்தியர்குலமடங்கத் தரணிபன்சரத்தின்மாய்த்த
வயத்தினைக்கண்டுதேவர் மலர்மழைசொரிந்தீராறு
புயத்தினன்போலுமிந்தப் புண்ணியனமக்குண்டான
பயத்துயரொழித்தானென்னப் பலபுகழ்ந்துரைத்துப்பின்னர். ()

பல்லியமுழங்கத்தெவ்வர் பருவுடல்பருந்துகவ்வக்
கொல்லியல்புரிந்தவென்றிக் கோமுசுகுந்தனோடு
மல்லியற்புயத்துவானோர் மன்னவன்சுதன்மையென்னு
நல்லியல்புனைந்துமல்கு மண்டபநண்ணினானால். (௩அ)

மைதிகழ்கொண்மூவூர்தி வாளரியாதனத்தி
லெய்திமற்றரசர்கோமாற் கெழின்மணிப்பீடநல்கிக்
கைதவத்தசுரர்க்காய்ந்து ககனவாழ்வெமக்குத்தந்து
பைதலில்லாதுகாத்தா யென்றுபன்முகமன்செப்பி. (௩௯)

பின்னருமன்பினந்தப் பெய்கழல்வேந்தைநோக்கி
யுன்னரும்பகையைமாற்றி யுதவிசெய்யுனக்குக்கைமா
றென்னுளமுவந்தளித்தற் கியைந்தனனுனதுவேட்கை
யின்னதென்றுரைத்தியீவ லென்றனனிசையான்மிக்கோன். (௪0)

வேறு.

அந்தவாசக மாகண்டலன்சொல
முந்துநல்வினை முற்றியதரன்முசு
குந்தனெஞ்சிற் குடிபுகுந்தானிம்பர்
விந்தைகூர விடங்கப்பிரானரோ. (௪௧)

மும்மையுந்தரு முத்தனருள்பெறுஞ்
செம்மனத்தமன் றேவர்தலைவற்பார்த்
தம்மபூசைநீ யாற்றும்விடங்கரை
யெம்மைவேண்டியிங் கீந்தருளென்றனன். (௪௨)

என்றபோதரி யேங்கிமுன்னீவலிஃ
தன்றியென்றொரு மாற்றமறைந்தில
மின்றினிச்செய லென்கொலெனாவிர
கொன்றிவிச்சுவ கன்மனொ டோதுவான். (௪௩)

மருவியான்றினம் வாழ்த்தும்விடங்கரைப்
பொருவவேறு புதிதமைத்திக்கணந்
தருதியென்றனன் றச்சனுமவ்வண
முருவமைத்தளித் தானுவப் புற்றனன். (௪௪)

அன்னதேந்தி வலாரியரசற்கூய்
மன்னகோடியென் றீந்திடவாங்கின
னின்னதன்றெ னெனதுருவென்றவன்
றன்னுளத்தி லுணர்த்தினன் றம்பிரான். (௪௫)

மீட்டுமன்னன் விபுதந்கிறைவனீ
கோட்டமின்றிக் கொடுத்திலைமெய்விம்பம்
வேட்டிலேனினிதை யென்றுவிளம்பினான்
வாட்டமுற்ற மனத்தினனாகியே. (௪௬)

காரையூர்பவன் மீட்டுங்கவின்கெழு
சீரை மேவு தியாகப்பரனுரு
வோரைந்தாக்கி யுதவ்வுமொவ்வொன்று
வீரைசூழ்புவி வேந்தன்மறுத்தனன். (௪௭)

காவொரைந்துடைக் காவலனம்முயிர்க்
காவியன்ன விடங்கரகன்புவி
மேவிவாழ விரும்பினர்போலுமா
லாவதென்னினி யென்றனரண்ணினான். (௪௮)

அன்னவேலை யரசனைநோக்குறிஇப்
பன்னுவச்சிரபாணி பகருவான்
மின்னுமேனி விடங்கரையான்முனந்
துன்னுகாரணஞ் சொல்லுவல்கேளென. (௪௯)

அனந்தன்பீதி லனந்தல்செய்யண்ணறன்
வனைந்தமார்பிடை வைத்துத்தொழுதுவந்
தனந்தநாளுவந் தாசரித்திட்டநீர்
புனைந்தவேணிப் புராதனமூர்த்திகாண். (௫0)

சீதவாரிதி சென்றுதிருமக
ணாதன்வாரிச நற்பதம்போற்றியிப்
போதவாரிப் பொருளைப்பெருகுமன்
னேதவாரியிழிதர வெய்தினேன். (௫௧)

ஏதமேது மிலாது முக்காலமும்
வேதநாடும் விடங்கப்பிரான்றனை
யோதுபூசை யுஞற்றிவந்தேனெனாத்
தீதிலாப்பத் திமையவன்செப்பினான். (௫௨)

செப்பியின்னணந் தேவர்பிரான்பின்ன
ரொப்பிலாதவவ் வுண்மைவிடங்கரை
வைப்பிறைக்கு வழங்கினனாகியப்
பொய்ப்பிலானடி போற்றிப்புகலுவான். (௫௩)

இன்றுகாறு மெளியனின்றுளிணைக்
கொன்றுபூசை யுளுற்றினனின்னமே
லென்றுகாண்ப னென்விரங்தேத்தது
மன்றுவள்ள லவற்கருள்வானரோ. (ருச)

மீதலத்தில் விழைவிலமாலினிப்
பூதலத்திடைப் புக்குவிளங்குதல்
காதலுற்றனங் காவலகேளினுந்
தீதில்லாவகை செப்புதுமென்றனன். (ருரு)

ஆண்டிலோர்தின மவ்வுழிவந்தெமை
வேண்டியாற்று விதிமுறைப்பூசனை
யீண்டுநாளு மியற்றுதல்போலுளம்
பூண்டுநல்லருள் பூக்குதுமென்றனன். (ருசு)

படங்கொளுகம் பனிமதி பூண்டருள்
விடங்கநாதனிவ் வாறு விளம்பவார்
கடங்கொளுகம் பரிக்கும்விண் காவல
னடங்கொளுத மகிழ்ச்சிகொண் டாடினன். (ருஎ)

பாழிவச்சிர பாணிபின்மன்னனை
வாழியேயென வண்ணவிடங்கரோ
ரேழினேரையு மேந்தியவ்வேந்தன்வா
ராழிசூழ்புவி யொல்லைவந்தண்ணினன். (ருஅ)

அந்த வெல்லை யடியவ ராசைநோய்
சிந்த நல்லருள் செய்யுந் தியாகனார்
சந்தமேய தடம்புயத் தம்முசு
குந்தனோடொரு மாற்றங் குறித்தனர். (ருகூ)

மன்னகேட்டியிம் மாநிலமீதுயர்
சென்னல்கன்னலிற் காட்டுஞ் செழும்பணை
யன்னமேவுறு மாரூர்வளம்பதி
தன்னையா * முனை தாரமென்றூர்ந்தனம். (சுO)

ஆதலிற்றிரு வாரூரமர்தரக்
காதலுற்றனங்காவல வாங்குவைத்
தாதரத்தெமை யாற்றுதிபூசையென்
றோதினன்மறை யாவையுமோதினன். (சுக)

* முன் ஆதாரம் - மூலாதாரம்.

வேட்டுவிதி விடங்கப் பிரான்றனைத்
தோட்டுமென்மலர்ச் சோலைசூரும்பூர்செய்
பாட்டினூற்றிக மூரூர்ப்பதியினி
னாட்டிவேந்தனயந்திருச்சித்தனன். (ருஉ)

கந்தவான்பொழில் காட்டுநெள்ளாறுகூ
னந்துமேய்தட நாகைமறைவன
மிந்திரன்பதி யேய்க்குநற்கோளிலி
யந்தமேயகன் றூப்பூர்காராயிலே. (ருந)

இத்தலங்களிலெய்தி யிமையவர்
சித்திரன்செய் தியாகவிடங்களைப்
பத்திகூரப் பதிட்டைசெய் தேத்தினன்
முத்திநற்பதமெய்து முசுகுந்தன். (ருச)

ஆயபின்ன ரமர ருரும்பகை
தீயவென்ற திறன்முசுகுந்தன்வான்
றேயுமாமதில் சூழ்கரு வூர்புகுந்
தேயுமின்பொ டிருந்தரசாண்டனன். (ருரு)

வேறு.

சீதமதிக்குடைநிழற்றப் பொன்னரியாதனத்திருந்து செங்கோலேந்திப், போதமதி யமைச்சர்கணம் புடைசூழப் புவியிருளைப் புகழான்மாற்றி, யாதவனற் குலத்தனையா னவனிபுரந்திடு நாளி லொருநாட்கானிற், போதகமாவரியிரலை புலியேன மிவை வேட்டம் புரிவான்முன்னூ. (ருசு)

முன்னியரு குறுமமைச்சர் முகநோக்கி மொழிதரலு முதிர்ந்தகேள்வி, யன்னவர்வெம் முரசறைவித் திடவறிந்து படைத்தலைவ ரடவிதோறு, மன்னியுறை வயப்படைகொண் மறவர் முதற்பலவீரர் மருவிச்சூழச், சொன்னமணி முடியிரதந் தனைக்கொடுவந் திறைகழலிற் சூதன்றாழ்ந்தான். (ருஎ)

கண்டுமகிழ்ந்திறைவனெழிற் கனகமணித்தேரேறிக்கதிர்கால்சூலந், தண்டுவளை தடிகுணிறுந்தகந்தனுவேன் முதலாய படைகடாங்கி, மண்டுகெருங்கடல்பயவாரிதிகலந்தா லெனவயவர் வேடரூடு, கொண்டுமரீஇயிருபாலுங்குழுமிவரக் கொழுங்கானங்குறுகினூல். (ருஅ)

கான்படர்வெவ்விலங்கடர்ப்பான் வந்ததிறற்காவலனெண்க திருலாவும், வான்படர்கோபுரமதிலுமண்டபமு மன்னுதளிதனக் குண்டாக்கு, வான்பெரியவருள்பொருந்தித் தங்கணத்துளொரு வனைக்கூய்வழங்குவான்வெள், ளான்பிடர்மீதிவர்ந்தருளு மகத்தீச னடியர்துயரகற்றுமீசன். (௬௯)

ஊன்வடிவேன் முசுகுந்த னுற்றவனத்தொல்லையினீ யொளி கொள்செய்ய, மான்வடிவாயெய்தியவள் தொடர்ந்திங்கண்வரப் புரிதியென்றுமண்ணும், வான்வடிவுமற்றவுமாமகத்தீசன் வழங் கலுமவ்வரக்கர்கோனம், மான்வடிவுகொண்டதெவ மாகணத்து ளன்னவனவ்வடிவுகொண்டான். (எ0)

கனகநிகர்மெய்யிலுடைக் கணமென்னப் பலபுள்ளி [illegible]னக் காட்டி, வினைகபடமிகவிளைக்கும் விலைமகளிர்விழிபோல வெருட்டி நோக்கிப், பனகமணிப்பணிமவுலிப் புரமனுமைப்படியந்தப்படர் கான்புக்கு, வனைகழல்வேன்மன்னர்பிரான் மயங்குறமுன்வாவி யுலாய்வழங்கிற்றன்றே. (எக)

செவ்வுமைமுன்னனுகுறல்கண் டரசனதிசயித்* தோடதிக ளாய்வோருக், கவ்வுமைகாற்பட்டதென வவாயதைக்கையகப் படுப்பான்வருதனோக்கி, யுவ்வுமைமென்செவிவிறைத்துச் சிறிது சிறிதகன்றுதென்பாலோடவன்ன,தெவ்வுமையோடினுமினியான் விடுவதில்லையெனத்தொடர்ந்தானிசை கொள்வேலான். (எஉ)

குறித்ததினி முடியுமெனக் குரங்கமுரங்குரங்கதுவக் கூட்டி வெய்தின், வெறித்தனபோல்விசைத்தெழுந் † தவாசிதிசைமேற் படரநோக்கிவென்றி, செறித்தபொலன்கழலரசன் சினமிகுந்து தொடர்ந்துபல்காவதம்பின்னுகப், பொறித்தபுலிக்கொடியிலங்கு புனனுடைகடந்துகடிதேகியப்பால். (எ௩)

மானேடுமடிச்சுவட்டை மதித்தரசன்வல்விரைந்து மாலைநிம்பக் கானேடுபுகழ்பரவு கவுரியன்றென்னு டடைந்து கரையைமோதித் தேனேடுநதிகடந்துதென்னதெனவளிமுரலுஞ்செழும்போதுற்று வானேடுமுறவுகொளு மந்தாரவனம்புகுத மறைந்ததம்மான். ()

அம்மானை யடர்பொழிலு ளாய்ந்தனன்மற் றதுகாணு னசல மீன்ற, ‡செம்மானையிடத்தமைத்துச் சிறுமானைக்கரத்தமைத்துச் சேணுலாவு, $கம்மானைமுடிக்கமைத்துக் கனகமணிச் சிலையைவரி சிலையாக்கண்ட, பெம்மானையகத்தீசப் பெருமானைமானவர்தம் பெருமான்கண்டான். (எ௫)

* ஒடதி - மூலிகை. † அவாசி - தெற்கு. ‡ செம் - அழகு. $ கம் - நீர்.

கண்டுகரங்குவித்துருகிக் கடியபசிக்கனல்கொளுந்தக்கவல்வோர்கையி, லண்டருலகத்தமுதமடையுமகிழ் வதுபோலவயன்மாலாதிப், பண்டைமறையறியாத பரம்பொருளைப்பங்கயச் செங்கண்களார, வுண்டுதுதிபல்பாடி யுழைபுரிந்த வுதவியினையுவந்தானிப்பால். (எசு)

செங்கண்மலர்த்திருமகளுஞ் செழும்படிகத்துருமகளுஞ் சேவிப்பத்தன், டிங்கணுதற்றிலகந்தோய்திருப்பதத்தாற் செழியமணிச்சூட்டுநாய, கங்கணங்கொள்கரதலத்தாற் கருணைபொழிகடைவிழியாலடிமைபூண்டோர், தங்கணலிவகற்றியருள் சவுந்தரநாயகிதனையுந் தரிசித்தானால். (எஎ)

ஐநாகப் பணிபரித்துப் பாய்புலியி னதளுடுத்துப் பணைத்துநீண்ட, கைநாக முரித்தரியார் கடிமதில்க ளொருமூன்றுங் கடப்பான்மேரு, வைநாகர் வாழ்த்தவரி வயச்சிலையா வளைத்தருளுமணிகண்டர்க்கம், * மைநாகமுகத்தரசன் மறைமுறையாற் பூசைசெய மதித்தானாகி. (எஅ)

அண்ணியதீவினையகற்று மகத்தியதீர்த்தம்படிந்தன்பளைந்தமெய்யிற், புண்ணியவெண்ணீறணிந்து பொருவிலுருத்திராக்கமணிமாலைபூண்டு, திண்ணியமுக்குறும்படக்கிச் சிவசிவவென்றைந்தெழுத்துஞ் செப்பித்திங்கட்,கண்ணியனற்கழன்மலரைக் கடிமலராலருச்சித்துக் கருதியேத்தி. (எகூ)

அரகரசங்கர வரவாபரண சிவசம்புபவ வாத்திசூடி, புரதகனவழலேந்தி மழுவாளி முக்கண்ண பூதநாத,பெருமசதாசிவ பித்தபிஞ்ஞக பார்ப்பதி கொழுந பேயோடாடி, வரதசசிதர பரமமாதேவ வெனப்பணிந்து வழுத்திப் பின்னர். (அ0)

அந்தரியை யழகனைத்துந்தன்வயமா யடைந்துகுடிகொண்டுவாழுஞ், சுந்தரியைச் சவுந்தரியைத் தொண்டர்கவ லகலவருள்சுரக்குமாயைச்,செந்தளிர்மென் பதத்திறைஞ்சிச் செழுமலர்கொண்டருச்சனைசெய் தேத்திவாழ்த்திச், சிந்தைமகிழ்ந்தனனவனுக்ககத்தீச னொருமாற்றஞ் செப்பலுற்றான். (அக)

காவலகேண் முன்னமெமைக் கயிலையினும் பூசைகண்டாய்கழிந்துபின்ன,ராவலுறீ இயாருரி லருச்சனைசெய் தாயிவணுமடைந்து போற்றி, யோவலிலாதுதவியபூ சனைக்குவந்தே நினைநிகர்வோருததிசூழும், பூவலயத்திடையாவ ரிருக்கின்றார் நமக்கடிமைபூண்டோர் தம்மில். (அஉ)

* மைநாகம் - கருமந்தி.

உன்னையிவணுய்த்த வெழிற்புல்வரியு மென்கணத்து ளொருவன்கண்டாய், மன்னவநீயெமக்குரிய மாண்புமிகு மாலயமொன் றமைத்தல்வேண்டு, மென்னமறை யியம்பிய வாக்காலியம்ப விறையவன்கேட் டிறும்பூதெய்தி, முன்னைநல்வினைப்பயன் வந்துற்றதென முன்னினனங் கிருக்குமெல்லை. (அ௩)

கான்புகுந்து பலதிசையுங் கலங்குறப்பம் பைகள் புடைத்துக்கழற்கான் மள்ள, ரூன்புகுபல்படையேவி யும்பல்கலையுழுவை யரியாளியெண்கு, கூன்புகுவன்னுதி யெயிற்றுக் கோலமொடு பகடெம்புகுலையவீட்டித், தேன்புகுதார்க் காவலன்றன் செழுமணித்தேர்நின்றவிடைச் சென்று சேர்ந்தார். (அ௪)

கொடியுடைய வையமிசைக் கொற்றவனைக் காணாமைக் குழைந்துவாடிப், புடைமருவு வனந்துருவிப் பொதியமலைத்திசைநாடிப் பூபன் செய்ய, வடிவுடைய பதச்சுவடு வயங்குகுறியதர் நோக்கிவயவர்யாருங், கடிதுதொடர்ந்தருஞ்சுரம்பல் கான்யாறுங் கடந்துசிதனுட்டிற் புக்கார். (அ௫)

ஊனுடைய வயப்படைஞ ரொருவாது நடவையின்முன் னோடுமெந்த, மானடியுந் தங்களிய மான்டியுங் கண்டேகி மலர்மந்தாரக், கானடியிற் கானடையுங் கடுக்கைபணி கலைமதியங் கவினுஞ் சென்னி, யானடிவிட் டகலாத வன்புடைய வரசடியை யடைந்துதாழ்ந்தார். (அ௬)

போற்றியவப்படைத்தொழிலோர் முகநோக்கிப் புனைகழற்காலிறைவன் செங்க, ணேற்றினருக் கிவ்வுழிவான் கைலையினுமெழுமடங்கா விமையோர் மெச்ச, வேற்றமிகு மாலயமொன் றியற்றுவதற்காம்பொருணீரீட்டுமென்னுச், சாற்றினன் மற்றவர் விரைவிற் றனித்தனியே நாற்றிசையுஞ் சார்ந்தாரன்றே. (அ௭)

வேறு.

பளிங்குசெம்பவளம்பச்சை படரொளிப்பதுமராகம்
வளங்கெழுவயிரஞ்செய்ய மாணிக்கமுத்துநீலம்
விளங்குவைடூரியங்கோ மேதகமென்றயாவு
முளங்களித்தரசன்காணக் கொணர்ந்தனருரவுமிக்கார். (அஅ)

அத்திறமறிந்துவேந்த னுகமத்துறைவழாது
சித்திரஞ்செய்யவல்ல சிற்பரைத்தருதிரென்னு
வித்தகத்தூதர்ப்போக்க விச்சுவகன்மனைத்த
குத்திரங்கடந்தபல்லோர் குழுமினர்வந்துற்றூரால். (அ௯)

அமைதருசிற்பர்தம்மை யறைகழலரசனோக்கி
யமையுறழ்தோளிபாகற் காலயமமைத்திரென்னக்
கமையுறுசெய்பசூட்டுக் கணபணவனந்தன்சென்னிச்
சுமைமகண்மகுடம்போன்று சுடர்தரச்சமைக்கலுற்றார். (௯௦)

ஒள்ளியவயிரத்துண்டத் துருக்குபொற்சாந்துபெய்து
தெள்ளியசுவரெழுப்பிச் செந்நுவர்மதலைநாட்டி
வெள்ளலில்பதுமராகத் திபங்குபோதிகையமைத்தங்
குள்ளுதற்கரியபச்சை யுத்திரம்பரப்பித்துய்த்தாய். (௯௧)

நாற்புறங்கவினத்தாழ்ந்து நடுநுனிநிமிர்ந்துதோன்ற
மாற்புறமனையநீல மணிச்சிலைக்கொடுங்கையேற்றி
மேற்புறமறையவண்கோ மேதகப்பலகைதைத்தப்
பாற்புறநிலைமாணிக்கம் பளிங்கினாற்கண்டுபின்னும். (௯௨)

கத்துமார்கலியிற்றோன்றுங் கதிர்மணித்தரளநீலம்
பத்தியினுறப்பதித்துப் பகலிடையிரவுகாட்டச்
சித்திரக்கருவிலத்த மண்டபந் தேவர்நாணு
நத்துமாமண்டபாதி நயமுறக்கண்டார்மன்னோ. (௯௩)

சேயுயர்விசும்புளோருந் திகந்தநாவிரண்டுங்காவன்
மேயவர்விரிஞ்சன்விண்டு மேதகுமுனிவர்யாரு
நாயகற்றொழுதற்கற்ற நாடினர்களுலிவைக
வாயிரங்கதிர்க்கான்மாட மமைத்தனர்மயனுநாண. (௯௪)

அயினுகைத்தவுணர்க்காய்ந்தங் கமரரைப்புரந்துநாளு
மயினுகைத்தெம்மையாள வந்தருள்குமரமூர்த்தி
கயமுகப்புத்தேளாதிக் கடவுளர்க்குரியவாய
நயமிகுதளிகள்சூழ நாட்டினராலயத்துள். (௯௫)

சோபனமாடமொன்று சோபைமிக்குடையதாகத்
தாபனஞ்செய்தாரந்தத் தனிவளமளந்துரைப்பான்
மாபனகாதிபன்றன்மன்னுநா நாற்பானைம்பான்
* கோபனமிலாதடைந்தான் கூறுநர்மற்றியாரோ. (௯௬)

பெருமதின்மூன்றினோடு பிரசமென்வாளியேவிப்
பொருமதனுருவந்தீயப் பொடித்தருள்புரிந்துதண்ணு
ரொருமதிமுடித்தபெம்மா னுவக்குமாலயத்தைச்சூழத்
திருமதிலமைத்தார்நேமித் திகிரிசூழ்ந்தென்னமாதோ. (௯௭)

* கோபனம் - மனறவு.

நால்வகைச்சதுரமாக நளிர்மதியிரவிசூழ
மேல்வகையுலகங்கட்கு மீச்செலச்சிகரஞ்சேர்த்து
மால்விடையுருவமைத்து வணங்குகோபுரங்கண்மேரு
மால்வரையொன்றின்மேலொன் றுய்ப்பல வயங்கன் மானும். ()

இன்னணஞ்சிற்பநூலோ ரியற்றியபணிகளியாவு
மன்னவர்மன்னன்கண்டு மகிழ்சிறந்தன்னவர்க்குப்
பொன்னணியாதியாய பூந்துகில்பலவுநல்கி
மின்னவிர்சடிலமோலி விமலனைப்பணிந்துசொல்வான். (கூகூ)

தூயநற்கயிலைச்சாரல் சூழ்வனந்திரிந்தநாயேற்
கேயபுன்மடமைநீத்தா யெழில்பெறுபுவியிற்கஞ்ச
நாயகன்குலத்துத்தோன்ற நல்லருள்புரிந்தாய்தெண்ணீர்ப்
பாயலையுததியாடைப் பாரரசளிப்பத்தந்தாய். (க00)

மாலவனுயிராய்முன்னி மருமத்திற்பொதிந்துவைத்த
தூயநின்விம்பமென்றன் றோட்டுணைசுமக்கவைத்தாய்
தீயகநாயேனிங்குச் செய்பணிகொண்டாயென்னுக்
காயமும்புலனுமொன்றிக் கரைந்தடிபணிந்துபின்னர். (க0க)

அரிமுகத்தரசர்கோமா னசலமன்றவத்திற்றோன்றுஞ்
சரிமலர்ப்பிரசக்கூந்தற் சௌந்தரநாயகிக்கும்
பரிவொடுகோயிலந்தப் படியியற்றுவித்துத்தீமை
புரிபவங்கடந்தேனென்னுப் புளகெழவுடல்பூரித்தான். (க0உ)

உளங்களித்தன்னோன்விண்ணோ ருரகர்கந்தருவர்சித்தர்
விளங்கியகருடர்விச்சா தரர்பலர் விரவிச்சூழக்
களங்கனியனையநீல கண்டத்தெம்மகத்தீசற்கு
வளங்கெழுதிருவிழாவு மாசறவியற்றுவித்தான். (க0௩)

ஆயபின்னமரரியாரு மரியவவ்விழாவைக்கண்டு
போயினர்தத்தஞ்சூழல் பூதலத்தரசனுங்குப்
பாயலைநதிகடுக்கை பனியிளமதிபரிக்கு
நாயகன்பதத்திற்றாழ்ந்து நமவெனத்துதிக்கலுற்றான். (க0ச)

கும்பசனுய்யும்வண்ணங் குறிநிலைதெரித்தாய்போற்றி
யம்புசனோர்சிருங்கற் கருணிலையளித்தாய்போற்றி
வெம்பியநிடதர்கோமான் வெருவரவொழித்தாய்போற்றி
யிம்பரிற்கருணைமல்கி யென்பணிகொண்டாய்போற்றி. (க0ரு)

குறியிலாதியானுகந்த கூவிளந்தழையைமேனா
ணறியதாமரையானாத னயனமாமலரின்மேலென்
றறிதரமுடிக்கொண்டேற்றின் னருள்சுரந்துலகந்தன்னை
யறமொடுகாக்கவைத்த வகத்தீசபோற்றிபோற்றி. (க0சா)

என்றுபற்பலதுதித்தவ் விறையவன்றாழ்ந்துமண்ணி
லொன்றிடச்சனித்தன்மாய்த லுற்றுழல்வினையைமாற்றிப்
பொன்றிகழுன்றுபாதாம் புயநிழலடைந்துவாழ்த
லென்றெனவிருக்கண்டாரை யிழிதரவேண்டினனால். (க0எ)

இவ்வகையரசன்வேண்ட வெம்பிரானகத்தீசன்றான்
செவ்வியகருணைநோக்கஞ் செய்திறைக்குரைத்தான்சின்னா
ளிவ்வுலகளித்துப்பின்ன ரெம்பெருங்கயிலைபுக்குக்
கவ்வையில்கணத்துணீயு மொருவனாக் கலத்தியென்றே. (க0அ)

மற்றதுகேட்டுவேந்தன் மனமகிழ்பெருகிப்போற்றி
வெற்றிகொள்சேனைசுற்ற வெண்குடைநிழற்றவேகிச்
சொற்றருபைங்கூழ்ப்பண்ணை சூழ்கருவூரிற்புக்குப்
பற்றலர்வணங்கப்பன்னாட் பாரரசளிக்கலுற்றான். (க0கூ)

இனையநாட்சிறிதுசெல்ல விரசிதகிரியைமேவு
நினைவினனாகிமன்ன னிலாமுடியகத்தீசன்றன்
வினையெலாமகற்றிமுத்தி வீடருள்கமலபாதத்
தினைமறவாதுநாளுந் தியானஞ்செய் திருந்தான்மன்னோ. (கக0)

அன்னபோழ்தடியருள்ளத் தனாரொழித்தருள்பாலிக்கும்
பொன்னொளிதிகழ்சிருங்க புரேசன்றன்கணத்துள்ளாருண்
மன்னியசிலரையேவி மாசறுமானமேற்றி
யன்னகாவலனையின்னே யழைமினென்றருளினனால். (ககக)

நன்றெனக்கணத்தோர்வஞ்சி நகருறீஇ யன்னவேந்தைக்
குன்றுறழ்விமானமேற்றிக் கொணர்ந்தவனாஞ்ஞையாலே
யன்றுவான்கயிலைசேர்த்தா ரகத்தீசனருளைப்பெற்றா
ரொன்றநாற்பொருளுமெய்த லரியதோ வுரைக்கினம்மா. (ககஉ)

வெண்ணிலாக்கதிர்பரப்பும் வேதண்டமெய்திமீனக்
கண்ணியோர்பாகற்போற்றிக் கணங்களுளொருவனாகிப்
புண்ணியமுசுகுந்தப்பேர்ப் புரவலன்வாழ்ந்தானென்னா
நண்ணியசௌனகாதி நற்றவர்க்குரைத்தான்சூதன். (ககங)

பேதியாமறைகளுன்காய்ப் பிறங்குபல்கலையாயானுஞ்
சோதியாமகத்தீசன்றன் றொல்கதையின்னுமுண்டேற்
போதியாயென்றுபின்னும் புனிதமாதவத்தோர்வேண்டக்
கோதிலாச்சூதனன்பு கூர்ந்தனன்கூறலுற்றான். (கக௪)

முசுகுந்தப்படலம் முற்றிற்று.

ஆகப் படலம் - அ - க்குச் செய்யுள் - ௫௧௫.

# மாகாளப்படலம்.

கொற்றவேன்முசு குந்தன்கதையினை
யுற்றவண்ண முரைத்தன மாலினிச்
செற்றமிக்கமா காளன் றிருவருள்
பெற்றகாதையும் பெட்பினிற்பேசுவாம். (க)

தொல்லைநாளினிற் சூரபதுமனுல்
வெல்லலுற்று வெருவிமருத்துவ
னெல்லைவிண்டுறந் தொண்டொடியாளுடன்
புல்லும்வார்திரைப் பூவுலகெய்தினன். (௨)

கோழிவேந்தர்செங் கோல்செலுநாட்டிடை
யூழிவெள்ளமொன் றுற்றவந்நாண்மகி
யாழுருதர னொரொரு தோணிசார்
காழியென்னுங் கடிநகருற்றனன். (௩)

ஆங்கொர்நந்தன மாக்கினனன்னதுட்
டாங்கெழிற்சசி தன்னையொளித்தவ
னோங்குவேணு வுருவிற்கரப்புறீஇ
யேங்குமுள்ளத் திருந்தனனென்பவே. (௪)

பின்னரன்னான் பிறங்குங்கயிலையைத்
துன்னியண்ணல்பாற் றுன்பெலாஞ்சொற்றுது
மென்னவுன்னி யிறைவிக்கிசைத்தையன்
றன்னைமுன்ன வவன்வந்து சார்ந்தனன். (௫)

வந்தசாத்தனை வாழ்த்தியென் னில்லையான்
வந்துறுங்கால் வரைக்காத் தருள்கென
வந்தவீரன்மா காளன்றனையழைஇ
யிந்தவாணுதற் போற்றுகென் றேவினன். (௬)

கருநிறத்தன் கரத்தரிவாளினு
ணுருமுவொத்த வுரத்தகுரலினன்,
றிருகுவிசையன் செங்கச்சுடையனு
யருகிருந்தவட் காப்பிணையாற்றினன். (எ)

போகியும்பரன் * பொற்றைக்குப்போகினு
ஞகிநந்தி யடிக்கட்பராயிறை
யாகுமீச னமயம்விஞவவுள்
ளேகலென்றலுந் தாழ்த்தங் கிருந்தனன். (அ)

இந்திராணி யிறைவன்பிரிந்தபி
னந்துமாக்க நலம்பெற்றவன்வரச்
சிந்தைகொண்டு சிறப்புறுநோன்பினந்
நந்தனத்தி லிருக்குமந் நாளின்வாய். (கூ)

சூரபன்மனத் தோகையெழிலினை இப்
பேரவாவினிற் காமம் பெருகியின்
பாரவுன்னி யவளூற்றுறையுளி
தேருமென்னச் செலுத்தினனேற்றனை. (கo)

தூதரெங்குந் துருவிக்காணுதுவந்
தோதிநிற்க வுழந்த வுணர்க்கிறை
காதுகாமக் கனலிடை மூழ்கினு
ணுதனேக்கி யயமுகி சூழ்ந்தரோ. (கக)

எங்கிருப்பினும் யானவட்கண்டட
னங்கையிற்கொண் டணேகுவலென்றுரைத்
துங்கண்சேடியாந் துன்முகியோடெழுந்
தெங்குநேடி யெழிற்காழிபுக்கனள். (கஉ)

ஆண்டையுள்ளவவ் வாராமத்துண்ணுழைஇத்
தேண்டிமெய்த்தவஞ் செய்பவட்கண்டிவள்
காண்டிபன்றந்தை காதலியென்றுணர்ந்
தீண்டிப்பைப்பய வெய்தினள்கிட்டியே. (கங)

அண்டமக்கொடி யாளைப் புலோமசை
கண்டுழந்தீவ ணம்மைக்கவர்ந்தயற்
கொண்டுசெல்லக் குறித்துவந்திட்டமின்
மண்டுதானவி யென்றே மருண்டனள். (கச)

* பொற்றை - மலை.

குன்றிரண்டெனுங் கொங்கையயமுகி
யென்றெனன்முன்னவ னெப்புவனத்துளுந்
துன்றுமாணையன் சூரபதுமன்று
னின்றனைப்புய நேரவவாவினன். (கரு)

திருவனைத்துஞ் சிறப்பிற் பெறுவ்வநீ
வருதியென்ன வழங்குரைகாதிடை
யுருகுசெம்பினீ ரூற்றலெனப்புகப்
பெருகுதுன்பினள் பேசுவள்சிறியே. (கசு)

தீயபாதகி யென்னிது செப்பினு
யேயவெத்திரு வெய்தினுநின்முனைத்
தோயயானிணங் கேனெனச் சொற்றனள்
காயவானவர் தாந்தொழுங் கற்பினுள். (கஎ)

மறுத்துரைத்தவம் மாற்றத்தயமுகி
பொறுக்கொணுச்சினம் பூண்டவளாயெவர்
குறுக்கினின்று குறித்துத்தடுத்தெனை
யொறுப்பினும்விடே னின்னையென் றேதியே. (கஅ)

கையினலவள் கையைப்பிடித்தவள்
வெய்துதெற்கில் விரைந்தெழுத்துச்செல
வையனேயோல மையமாகாளவாட்
கையனேயோல மென்று கதறினுள். (ககூ)

அன்னபோதத் தவள்கூயரற்றொலி
கன்னமேறமா காளன்விரைந்துவிண்
மின்னினுடெழு மேகமெனக்கைவா
ளென்னவீசித் தொடர்ந்துசென்றனரோ. (உ0)

நின்னிலென்று வரற்குணிசாசரி
தென்னனுட்டினிற் சேர்ந்துவிரிசலை
நன்னதிக்குத்தென் ஞாங்கர்மந்தாரக்கா
னென்னுங்கேத்திரத் தெல்லையையெய்தினுள். (உக)

உருமுவுட்க வுரத்துங்கரித்தவ
*னெருமுகத்தியை யூங்குக்தடுத்தெதிர்ந்
தருகென்காவலீ லார்ந்தவிம்மாதினைப்
பருவரற்படப் பற்றினை யாரைநீ. (உஉ)

* ஒரு - ஆடு.

என்றுசாவநீ யாரெனதன்னனாற்
றுன்றும்யாவையுந் தோற்றுவறியுனாய்
நின்றபோகிதன் றொண்டவனேசொலாய்
நன்றெனக்கென வன்னாணைத்தனள். (உ௩)

காரணத்திகழ் காரிருண்மேனியன்
வாரணத்திறை வாகனமூர்பவன்
பூரணைக்களி பூண்டவன்சேவகத்
தேரணிந்தமா காள னெனச்சொனான். (உ௪)

அண்டம்பற்பல வாளுமவுணர்கோ
னெண்டரத்தகு மேண்கொளிளையளெற்
றண்டிநின்றுநீ தாக்கவும்வல்லையோ
கொண்டுநின்றனைக் கொல்லுவலின்றெனா. (உ௫)

அங்கையேந்திய சூலத்தையார்ப்பொடத்
துங்கனாருயிர் துய்க்கவிடுத்தன
ளங்கதன்னவ னாகங்குறுகக்கைத்
தங்குவாளினிற் றாக்கித்துணித்தனன். (உ௬)

அன்னபாதகி யாங்கதுகண்டுபின்
றுன்றுதுன்முகி சூலத்தைக்கைக்கொடு
மின்னனாளையவ் வெய்யள்கரத்தளித்
தொன்னலன்முன முற்றனள்கிட்டியே. (உ௭)

கறுத்தெதிர்ந்துமா காளனுரத்திடைத்
துறுத்துக்குத்திய சூலத்தைநீட்டலு
மறுத்துவீரன்கை வாளினிற்றாக்கியஃ
திறுத்துநுண்டுகள் செய்தா னிறைக்குளே. (உ௮)

இரண்டுசூலமு மிற்றமையா லவள்
வெருண்டசிந்தையின் வெங்கொடுத்துப்பிற
குருண்டதாயவெற் பொன்றைப்பெயர்த்தெடுத்
திருண்டமேனியன் மீதேயெறிந்தனள். (உ௯)

அடுக்கன்மேல்விழா தங்கைவசியினாற்
றடுத்துவீசினன் றாக்கியதைத்துகள்
படுத்தியன்னதும் பாதிமுறிந்ததாற்
கடுத்ததானவி கண்டுகளித்தனள். (௩௦)

வாளுமிற்றதுன் வன்மையுமிற்றது
காளநின்னைக் கறித்துணுவேனினே
மூளுமென்பசி முற்றுமென்றுன்னினள்
மீளுமோபாதி விரைந்துய்தியாலென்று. (௩௧)

நிந்தைகூறி நிசாசரிதன்னொடு
வந்தசேடி வசத்துளமாதினைத்
தந்திடென்று தன் றாழ்கைப்பிடித்திழுத்
துந்தியேகுதற் குன்னிமுயன்றனள். (௩௨)

அன்னசெய்கை யறிந்துமாகாளன்கைத்
துன்னும்வாளுந் துணிபட்டொழிந்ததா
லென்னினிச்செய லென்றுமருண்டுளத்
துன்னியென்று முணர்ந்திலன்மாழ்கினன். (௩௩)

அத்தலத்தகத் தீச னருளினன்
மெய்த்தமாகாள் வெவ்வுடைவாளினாற்
கைத்தபாதகி கையைத்துணித்திடென்
றொத்தகாயவாக் கொன்றெழக்கேட்டனன். (௩௪)

இன்னவாறச ரீரி யிசைத்ததை
யன்னவீர னதிசயித்திங்கணே
துன்னுமாதவ மூண்டுகொலெம்பிரான்
றன்னதாரரு ளேயெனத் தாழ்ந்தனன். (௩௫)

இன்னதீர்ந்துமா காளனெழுந்துபின்
மன்னுதன்னுடை வாளினைக்கையிற்கொண்
டன்னமைம்முகி யைக்கிட்டிக்கூழையைப்
பன்னிடக்கரம் பற்றியிழுத்தரோ. (௩௬)

கற்பினிற்றிகழ் கற்பகநாடனிற்
பொற்பமைந்த புலோமசையைத்தொடும்
வற்பமைந்த கரத்தினை வாளினால்
வெற்பெனப்புவி வீழத்துணித்தனன். (௩௭)

அத்தமிற்ற வயமுகிமண்மிசைத்
தத்திவீழ்தலுந் தாளாலுருட்டினன்
கத்தினின்றிடு துன்முகிகையையு
மத்தரத்தி லறுத்தனன்வீரனே. (௩௮)

சோரிவெள்ளத்திற் றோய்ந்திட்டெழுந்தவவ்
வோரிரண் * டிலா வொண்டொடியார்விளைஇச்
சூரன்முன்னுறீஇத் துன்பமடைந்ததும்
வீரனுற்கரம்வீழ்ந்ததுஞ் சொற்றனர். (௩௯)

புல்லின்வாய்ப்படு புல்வாயைமீட்டென
வெல்லும்வீரமாகாளன் விடுவித்த
மெல்லியற்கொடு வேணுவனம்புகுந்
தொல்லைநீந்தனத் துய்த்தனன்பின்னரே. (௪0)

நீட்டுமன்னவன் * வேணியின்வாணிமுற்
கேட்டவங்கட் கெழும்மந்தாரமாங்
காட்டுளெய்திநேர் கண்டானிணைந்தவை
கூட்டுநம்மகத் தீசன்பொற் கோயிலை. (௪௧)

ஆலயந்தொழ லாருயிரியாவைக்குஞ்
சாலநன்றெனச் சாற்றும்பழமொழிக்
கேலுமெய்ப்பொரு ளிவ்வினத்துள்ளவிவ்
வாலயந்தொழ லேயென்றணுகினன். (௪௨)

ஈசன்சந்நிதி யிற்றிகழ்தீர்த்தங்கண்
டாசின்மூழ்கின னாகிமெய்க்காப்பிணைப்
பூசியக்க மணிப்பணி பூண்டுளத்
தேசிலன்பினுள் ளெய்தினன்காளனே. (௪௩)

அற்றைஞான்று சிவநிசியாதலாற்
கற்றையஞ்சடைக் கண்ணுதலைத்தவர்
மற்றைவானவர் வந்தருச்சித்தலைக்
கற்றவீரமா காளனுங்கண்டனன். (௪௪)

எய்தினனகத் தீசன்றிருமுனன்
பெய்தினன்விழுந் தேத்தியெழுந்துவி
டெய்துபூசனை தானு மியற்றுவா
னெய்துநற்பொரு ளியாவையு மீட்டினன். (௪௫)

கங்கைமேவிய கண்ணுதல் சென்னியிற்
றுங்கநீரபி டேகஞ் சுருதியோ
டங்கையாட்டிச்சந் தாதியணிந்தலர்
கொங்குமாமலர் கொண்டருச்சித்தனன். (௪௬)

* இலா ஒண் தொடியார்-வளையணியுங்கையில்லாதவர். * வேணி-ஆகாயம்.

நறியதூபமு நன்னேய தீபமுஞ்
செறியமுன்பு திகழ்தரக் கோட்டியின்
கறிவருக்கங் கமழ்சாலி யன்னம்பல்
வெறியபூப நிவேதனஞ்செய்தனன். (சஎ)

காய்த்தமுப்புடைக் காயொடு முப்பழம்
வாய்த்தவெள்ளிலை வாசச்சுருளுமான்
மேய்த்தசேவுடை யாற்கு நைவேதித்துத்
தோய்த்தகற்புரா சனமுஞ் சுழற்றினன். (சஅ)

பின்னரந்தமா காளன் பிறங்கெழி
றன்னிலொப்பில் சவுந்தரநாயகி
தன்னையும்விதி யாலத்தகுதியின்
முன்னுபூசனை யாற்றி முடித்தனன். (சகூ)

அம்மையோடப்ப னுயவவர்தமை
மும்மையாகு முறையின் வலம்புரிந்
தம்மவங்கமெட் டாரவிறைஞ்சுபு
செம்மைநற்றுதி செப்பலுற்றனரோ. (ருo)

மாயையால்வரு மைம்முகிதன்னையா
னையுமாறுவென் றிந்திரற்கில்லினை
யீயும்வண்ணமெனைத் தடுத்தாளுவான்
காயவாக்கருள் கண்ணுதல்போற்றியே. (ருக)

ஆதிநாளி லகத்தியமாமுனி
தீதிலாத சிருங்க முனிசெயுங்
கோதில்பூசையி லென்னதுங் கொண்டிடும்
பேதியாவருட் பிஞ்ஞகபோற்றியே. (ருஉ)

ஏழுதொணுததா யீரிரண்டாயுள
பழுதுறாத பழமறை யந்தத்தி
னழுவிலாத சவுந்தரநாயகி
தழுவுமேனித் தயாபர போற்றியே. (ருங)

இன்னவண்ண மிறைஞ்சித்துதித்தலுஞ்
சென்னியாட்டிச் சிருங்கபுரோசன்று
னின்னற்பூசனை நேர்ந்தன நின்னவா
வென்னிகழ்த்தெனக் காளனியம்புவான். (ருச)

என்றுநின்றுட் கியற்றுஞ் * சபரியைத்
துன்றிநிற்கத் துணிந்தனன் மற்றொன்று
மென்றனக்கவா வின்றென் றியம்பினன்
குன்றவில்லியுங் கூறருள்பூத்தரோ. (ருரு)

இந்தவாலயத்திற் றென்குடக்கினி
னந்திலென்று நீ நன்றுறைந்தெங்கழற்
கந்தில்பூசனை யாற்றிவாழ்கென் றுகம்
மிந்துவாழ்கத் தீசனருளினன். (ருசு)

அன்றுதொட்டுமா காளனுமம்பரத்
தென்றுதொட்டொளி யெய்ந்தவிமானம்வான்
மீன்றுதொட்டிடு மாட்சியக்கோயிலி
னன்றுதொட்டிட நாளுமுறைந்தனன். (ருஎ)

மாகாளப்படலம் முற்றிற்று.

ஆகப் படலம் - கூ-க்குச்செய்யுள் - ருஎஉ.

## தீர்த்தவிசேடப்படலம்.

வாளகங்கை வலம்படத் தாங்குமா
காளன்பூசனைக் காதையை யோதினு
நாளுமூழ்கினர் ஞாலத்துதித்தலின்
மீளுதீர்த்த விசேடமுங்கூறுவாம். (க)

வேறு.

அமலமாங் கோட்டீச னாலயத்திருமுன் றாய்மை
குலவகத்தியதீர்த்தந்தான் குடைபவர்க் கறங்கணல்கு
நலமதாற் றருமதீர்த்த நற்பொரு ளுதவுமாற்றாற்
புலர்தலி லருத்ததீர்த்த மென்பமெய்ப் புலமையாளர். (உ)

நினைந்திடு காமமெல்லா நேர்தர வுதவலாலே
புனைந்துறை காமதீர்த்தம் பூரண விதேகமுத்தி
நனைந்ததி லாடினார்க்கு நல்கலான் மோக்கதீர்த்தம்
வனைந்துள வுண்மைஞானம் வழங்கலான் ஞானதீர்த்தம். (ங)

மருமநோய் கொடியதாய வயிற்றுநோய் கண்ணோய்புண்ணோஞ்
சருமநோய் நாடிவீங்கித் தடிக்குநோய் குட்டமென்னுங்
கருமநோ யனைத்துந்தீர்க்குங் கருதிமூழ்கினார்க்கத் தீர்த்த
மருவுநோய் தீர்க்கவேறு மருத்துவர் வேண்டுங்கொல்லோ. (ச)

* சபரி - பூசை.

இம்மையிலியாவரேனு மெண்ணில ரொருகான்மூழ்கின்
வெம்மைமிக் கதிகரித்து மெய்யினீர் மொரக்குள்போற்றோன்
றம்மைநோ யாதிதீர்க்கு மத்தட மென்னதீரா
வம்மைநோ யினையுந்தீர்க்கு மதற்கொரு சிறப்பதாமோ. (௫)

பேய்தரு முறிக்கும்பூதம் பிரமராக்கதம்விட்டோடும்
ஆய்தருபிரமகத்தி யாதியபவமும்போகுஞ்
சேய்தருதமிழிற்காசான் செய்யுமப்புனிதநீர்த்தந்
தோய்தருவார்மயிர்க்காற் றோயநுண்டுளிதெறிக்கின். (௬)

செப்புமத்தீர்த்தப்பாங்கர்த் தென்புலத்தார்பேர்கூவி
யிப்புவியுள்ளாரெண்ணீ ரிறைத்திடில்ன்றோராழ்ந்த
வெப்பமாம்பவர்க்கநீத்து விண்ணவர்மானமேறி
யொப்பிலாச்சுவர்க்கமேவி யூழிநாள்வாழ்வார்மன்னோ. (௭)

சமையுறுதோற்றந் திங்கட் சனிப்பிரண்டயநத்தோற்ற
மமையொடுபௌவம்பாந்த ளலரியம்புலியைக்கவ்வு
மமையநற்சோமவார மத்தடத்தூடுவார்தா
முமையுறுபாகனுரு ருற்றுவாழ்ந்துறைவர்மாதோ. (௮)

ஒருங்குணரகத்தீசன்று னுறையுமாலயக்குமேல்பாற்
சிருங்கமாமுனிவன்றொட்ட தீர்த்தத்துளொருகாற்றோய்வார்
மருங்கிருபுடையும்வெண்சா மரையிரட்டுறநாற்கோட்டுப்
பெருங்கிரியெருத்தமேறிப் பிறங்குவான்போகந்தோய்வார். (௯)

அத்தடத்தினிற்சங்கற்ப மறைந்துவாரணசூத்தத்தோ
டெத்தினமுமுழுகினனு மிப்பவத்துறுபாவம்போ
முத்தமசோமவாரத் துற்பவத்திரண்டின்றோம்போ
மத்தனுர்சிவநிசிப்போ தாடின்முப்பவத்தகம்போம். (௧௦)

ஐந்தருநீழலிட்ட வாதனமவாவினனு
மைந்துறுதேனுர்கஞ்ச மாளிகையவாவினனும்
பைந்துழாய்கமழுநாகப் பாயலையவாவினனு
நைந்திடாதத்தீர்த்தத்தி னனமேயவாவவேண்டும். (௧௧)

தூயவத்தீர்த்தந்தன்னுட் டோன்றிய * நுணன்மீனாதி
யாயவுங்கைலைமேவி யமர்ந்துபன்னாளுநீஇப்பின்
மேயவத்தலத்தின்மீட்டு மேதகுபிறப்பொன்றுற்றுத்
தாயனனகத்தீசன்றன் றுண்மலரொன்றிவாழும். (௧௨)

* நுணல் – தவளை.

புகன்றவத்தீர்த்தந்தன்னிற் புண்ணியகாலமூழ்கிச்
சுகந்தருமகத்திசன்றாட் டொண்டினிற்சிறந்தவேத
மகம்புரியந்தணர்க்கு வழங்கிடுங்காசொன்றற்கோ
ருகம்பெறக்கைலைவெற்பி யுற்றுவாழ்ந்திருப்பர்மன்னோ. (கங)

வையகமதனிற்றோன்றி மரீனிடச்சாதமுற்றோ
ரையவெவ்விதத்தேனுஞ்சென் றத்தடந்தோய்தல்வேண்டுஞ்
செய்யவஃதியலாதென்னிற் றீர்த்தத்தோர்குடமதேனு
மெய்யுறவரவழைத்து மெய்யினைநனைத்தல்வேண்டும். (கச)

அன்னதுமுற்றாதென்னி லந்தநீர்தன்னிலாடன்
மன்னினர்தமைக்கண்டேனு மருவுதல்வேண்டுமஃது
துன்னுறற்கியலாதாயிற் சொல்லுமத்தோயந்தோய்ந்து
முன்னுறுகாற்றுமெய்யின் மொய்த்திடச்செய்தல்வேண்டும். (கரு)

அவ்விருபுனிததீர்த்தத் தலகிலாப்பெருமைமுற்றுஞ்
செவ்விதினுணர்த்தவல்லான் சேடனுமல்லனென்னி
னெவ்வழியுணர்வினுலியா மெடுத்துரைத்திடுதுமென்னக்
கவ்வையின்முனிவர்க்கன்று கட்டுரைத்தனனற்சூதன். (கசு)

தீர்த்தவிசேடப்படலம் முற்றிற்று.

ஆகப் படலம் - ௪௦ - க்குச் செய்யுள் - ௫அஅ.

---

# தலவிசேடப்படலம்.

தீர்த்தன்செஞ்சடைத் தீர்த்தமெனத்திகழ்
தீர்த்தமான்மியஞ் செப்பினமாலினிக்
கூர்த்தநுண்மதி யீர்கேண்மின் கூறுமச்
சீர்த்தலத்தின்வி சேடமுஞ் சாற்றுவாம். (க)

வேறு.

அம்புவியொருபாலாழா தகசைதன்றிருமணத்தி
லெம்பிரான்றன்னையொத்தா னெவனவனேன்பியற்ற
வும்பர்போற்றிடுகோட்டூரே யுத்தமமென்றுற்றோனே
லிம்பரினத்தலக்கொப் பெதனையாமெடுத்துரைப்பேம். (உ)

அத்தலத்திரவொன்றேனு மகத்தீசனடிக்கன்பேய்ந்த
சித்தநன்குடையராகித் திகழ்தரவசித்தோர்கங்கை
தத்தலைவாரணாசித் தலத்திடையாயுள்காறு
நித்தியம்பெறவதிந்தோர் நேர்தரும்பயனைச்சார்வார். (ங)

அன்னமாதலத்திலன்போ டாதுலர்தமக்கோர்முட்டி
யன்னமாயினுமளித்தோ தாரமர்பிரயாகைதன்னி
லன்னவாகனனேனோய ரயுதருக்குணவருத்து
மன்னமாவறத்தினோர்க ளடையும்பேறெளிதிற்கொள்வார். (ச)

சுவணதானம்பூதானஞ் சுரபிமாதானநூலா
னவமியல்கோடிதான நவில்கன்னிகாதானங்கள்
செவையுறமற்றைத்தேத்துச் செயவரும்பேறுகோட்டு
ரவனொருகாசுதூயோர்க் களித்திடினிலேசிற்சாரும். (ரு)

பிறந்தவர்தமக்கவ்வாரூர் பிற்கடைநாளங்குச்சென்
றிறந்தவர்தமக்குக்காசி யிருகண்கண்டார்க்குத்தில்லை
மறந்திலர்நினைந்தார்க்கண்ணு மலையதாய்த்திகழுங்கோட்டூ
ரறைந்தநாற்செயலிலொன்றை யடைந்தவர்தாமேமுத்தர். (சு)

தென்மலைமுனிக்கரும்பிச் சிருங்கமாதவர்க்குப்பூத்து
மன்மதிக்குலத்துதித்த மன்னனுநளற்குக்காய்த்து
நன்முசுகுந்தனுக்கு நலனுறப்பழுத்துக்கான
னென்மகாற்கினிக்கமுத்தி யெனுங்கனியீந்ததவ்வூர். (எ)

குடமுனிக்கருளும்பெம்மான் குடிலையஞ்சடைமேலாட்டக்
கடநிறைபால்சுரக்குங் கற்றுவினிாகள்சேர்த்துத்
திடமுறவைத்துப்புல்லா தியவுணவூட்டிக்காப்போர்
சுடரிரண்டுளவனைக்குஞ் சுவர்க்கம்வீற்றிருந்துவாழ்வார். (அ)

சிருங்கபுரேசற்காட்டுந் திகழ்மணிக்கலசம்வாச
நெருங்கியதசாங்கதூப நெய்யுறுதீபங்கோட்டும்
பெருங்கருவிகணல்லோனத பிறங்கியகண்டையாதி
மருங்குறவுதவினோர்தாம் வான்பதத்துறைவர்நீணாள். (கூ)

அஞ்சுவான்றருவினென்று வறையுமந்தாரக்கானி
னஞ்சமுதாக்கிக்கொண்ட நம்பிரானகத்தீசற்கு
மஞ்சனமாட்டிநெய்பெய் வருக்கான்னநைவேதிப்போ
ரஞ்சுவான்றருக்கீழ்ச்சிங்க வணையிருந்தமுதுதுய்ப்பார். (க0)

நித்தநம்மகத்தீசற்கு நித்தியபூசைநேர்நை
மித்தியபூசையோடு விழாச்சிறப்பியற்றுவிப்போர்
மெத்தனையுண்சேவாதி வாகனமாக்குவிப்போ
ரத்தன்வெண்கைலைமேவி யனந்தனுள்வாழ்வரன்றே. (கக)

மாலயன்றுருவநீண்ட வடிவுளாலகத்தீசன்ற
ஞலயம்புதுப்பிக்கு மன்பினரிம்பர்நீணாள்
பாலனம்புரிந்துபின்னர் பற்பலபோகம்விண்ணின்
மேலநுபவித்துநம்மான் மேவுதண்டமேவுவாரால். (கஉ)

கருதுசாக்கியரெறிந்த கல்லினைமலரெனக்கொண்
டருளகத்தீசன்றளி னருச்சனைக்குரியநாற்பூ
மருவியநந்தனங்கள் வைத்துறவளர்ப்போர்மீட்டோர்
கருவினிற்புகுதாவண்ணங் கயிலையிற்புகுவார்மன்னோ. (கங)

தலவிசேடப்படலம் - முற்றிற்று.
ஆகப் படலம் - கக - க்குச் செய்யுள் - ௬0க.

## முனிவர் பூசனைப்படலம்.

இன்னவாறகத் தீசன் விசேடமுந்
தென்னுலாமிரு தீர்த்தவிசேடமு
மின்னுகோட்டூர்த் தலத்துவிசேடமுந்
துன்னும்வார்சடைச் சூதன்புகன்றனன். (க)

கேட்டசெளநக னாதியகேள்விசால்
கோட்டமில்லாக் குணத்துமுனிவருண்
ணாட்டமுற்றுணர் ஞானநற்சூதன்றன்
றாட்டுணைச்சலசங்களிற் றாழ்ந்தனர். (உ)

புகல்சிருங்க புரம்புகுந் தைங்கரன்
குகன்செளந்தர நாயகிகூடிவா
முகமகிழ்ந்த வகத்தீசன் பூசிப்பால்
மிகவிரைந்து விடைபெற்றெழுந்தனர். (ங)

அங்கணின்று மவாசித்தியைப்படர்ந்
தெங்குந்தம்மெதி ரேய்ந்தநதிகளுந்
துங்கவான்பொழில் சூழ்ந்தபஃறையமுங்
கங்குன்மூசுபல் கானுங்கடந்தனர். (ச)

பொன்னிநாடு கடந்தப் புறஞ்செலா
வென்னநாடு மிதற்கொப்பிலவெனப்
பன்னிநாடும் படிப்பழனங்களு
றென்னநாட்டெல்லை சேர்ந்தனர்மாதவர். (ரு)

வெள்ளமிக்குறு வெள்ளாற்றதன்றெற்கி
லுள்ளநீத்த வொழுக்கின் * பணிமதி
வள்ளவாய்மலர் வாசமதுநதி
விள்ளுமென்மை விரசலைதாண்டினர். (சு)

அங்கடர்ந்தமந் தாரவடவியுட்
டுங்கமாதவர் துன்னியாசானுரை
யங்குமுற்று மறிந்தகத் தீசன்வாழ்
கொங்குலாந்தணிக் கோபுரங்கண்டனர். (எ)

காண்டலும்படிக் கட்டண்டமென்னவீழ்ந்
தாண்டெழுந்தபின் னஞ்சலியோடுசென்
றீண்டியுற்றகத் தீசன்றன்சன்னதித்
தீண்டின்வெம்பவந் தீண்டாநீராடினர். (அ)

பூதிகண்டி புனைந்தைந்தெழுத்தெணி
யாதிநாயக னாலயத் துட்புகூக்
காதலால்வலம் வந்துமண்கட்படிந்
தோதுமெட்டுறுப் பொற்றவுறைஞ்சியே. (கூ)

என்னில்சீரகத் தீசலிங்கத்தினைக்
கண்ணினாலுறக் கண்டுகெடப்புன
னண்ணவைத்து நமகசமகங்க
ளண்ணவோதி யபிடேகஞ்செய்தனர். (க0)

ஆனினாற்றரு மைந்தமுதந்தனிப்
பானறுங்கழை பல்பழச்சாறுநற்
றேனுடன்விரைச் செஞ்சந்தனக்குழம்
பானவுஞ்சிரத் தாட்டினர்மாதவர். (கக)

துய்யநீவியிற் றுய்த்தீரமாற்றியே
செய்யகோடிகஞ் சேரவலங்கரித்
தையமர்ந்தசந் தாதி யணிந்துபல்
வெய்யவொண்பணி வேய்ந்தனரன்பொடும். (க2)

தாதுலாவுமந் தாரமலர்கொடு
தீதிறுமமோ ராயிரஞ் செப்பியே
பாதிமங்கையன் பாதத்தருச்சித்துக்
கோதிறாபமுந் தீபமுங்கோட்டினார். (கங)

* பணிமதி - பாம்பாறு

பாயசான்னம் பருப்புப்பல் பண்ணிய
நேயமோடு நிவேதித்து நான்குநான்,
காயமாவுபசாரங்களாற்றியே
தூயவன்பிற் றுதிக்கலுற் றாரரோ. (கச)

கும்பசன்கலைக் கோட்டுத்தவமுனி
யிம்பராண்ள னெய்துமுசுகுந்தன்
பம்புவன்மை படைத்த மாகாளனுற்
றன்பின்பூசைக் கருள்பரபோற்றியே. (கரு)

துண்ட வெண்மதி சூடிய வேணிய
மண்ட ரம்பையர் மங்கலங் காத்தவ
கண்டு யாங்கள் கதிபெற நின்றரு
ளண்டர் நாத வகத்தீச போற்றியே. (கசு)

வேதம் யாவும் விளம்பி யுணர்வருஞ்
சோதி யேசுடர் தூமணி யேயுமை
நாத னேபுவ னங்க ளனைத்திற்கு
மாதி யேயெம் மகத்தீச போற்றியே. (கஎ)

போற்றி சங்கர பூதங்க ணாயக
போற்றி மூன்று புரங்கள் பொடித்தவ
போற்றி தற்பர புண்ணிய மூர்த்திய
போற்றி கோட்டேர்ப் புராதன போற்றியே. (கஅ)

இன்ன வாறு துதிப்பொ டிறைஞ்சிப்பின்
னன்னர் சாலுஞ் சௌந்தரநாயகி
தன்னை யும்விதிச் சார்பினிற் பூசனை
யன்ன மாதவ ராற்றி வணங்கினர். (ககூ)

பின்ன ரிந்தப் பிறவிப் பெரும்பயன்
றன்னை யுற்றனஞ் சார்வ தினியெவ
னென்ன வானந்த மெய்தி யகத்தீசன்
பொன்ன டிப்பூப் புனைந்து விடைபெறீஇ. (உ0)

அங்கண் சவுனக ணாதியம் மாதவர்
மங்கை பாகன்றன் வார்சடைக் காட்டிழி
கங்கை யின்சிறு கால்களு ளோர்வளந்
தங்கு நைமிசஞ் சார்ந்தனர் வாழ்ந்தனர். (உக)

## வாழ்த்து.

குவலயமேற்சிருங்கபுரமந்தாரவனமென்னுங்கோட்டூர்வாழ்க
பவவினையைப்பாற்றியருள்பழுக்குமகத்தீசன்மலர்ப்பதங்கள்வா
தவமுனிவரகத்துறையுஞ்சவுந்தரநாயகியம்மைசரணம்வாழ்க[ழ்க
ஞவரருளாலத்தலத்தவ்வாலயத்தைப்பாலனஞ்செய்யன்பர்வாழ்க.

முனிவர் பூசனைப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் - கஉ - க்குச் செய்யுள். சுஉரு.

---

## கோட்டூர்ப்புராணம் முற்றிற்று.

---

அகத்தீசர் துணை.

---

# சோதன புத்திரம்.

| பக்கம். | பாட்டு. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௬ | ௮ | துணைய | துணைய |
| ௯ | ௨௯ | சயப் | சமப் |
| ௧௦ | ௪௧ | தொக்கு | தொகுக்கு |
| ௧௧ | ௪௫ | முன்றை | மூன்றை |
| ” | ௪௭ | வெகுண்டு | வெகுண்டு |
| ௧௩ | ௫ | ம்பணை | ங்கதி |
| ௧௫ | ௨௩ | மதரர் | மாதரர் |
| ” | ௨௪ | னினி | னிவி |
| ௨௦ | ௪ | றாறு | றாரு |
| ௨௩ | ௮ | துத்க | துக்க |
| ௨௫ | ௧௯ | சுவணி | சுவண |
| ௨௭ | ௪௦ | நகை | நணை |
| ௨௯ | ௫௩ | பிகையயுங் | பிகையைக் |
| ௩௨ | ௭௬ | சங்கை | கங்கை |
| ” | ” | கங்கை | சங்கை |
| ௩௩ | ௪ | நான் | நூன் |
| ௩௫ | ௨௧ | போல | போவ |
| ௩௯ | ௫௧ | வந்தே | வந்தேந் |
| ” | ௫௫ | வாயமை | வாய்மை |
| ” | ௫௭ | யதத் | யகத் |
| ௪௦ | ௬௨ | யுறு | யறு |
| ௪௧ | ௩ | ரென்றே | ரன்றே |
| ௪௪ | ௨௯ | வென்றேன் | வென்றே |
| ௪௬ | ௪௩ | வுற்று | வுற்ற |
| ௪௭ | ௫௨ | னென்றமு | னென்றென்றமு |
| ௫௦ | ௭௫ | பூசித்நு | பூசித்து |
| ” | ௭௯ | கன்றினிற் | கன்றிநிற் |
| ௫௭ | ௩௪ | பண்ணை | பண்ண |
| ௫௯ | ௪௬ | விபுதற் | விபுதர்க் |
| ௬௩ | ௭௭ | பத்தன் | பத்தண் |
| ௬௫ | ௯௪ | நாவிரண் | நாவிரண் |
| ” | | * மனறவு | மறைவு |
| ௭௦ | ௧௫ | யென்றென் | யென்றன் |
| ௭௨ | ௩௩ | யென்று | யொன்று |
| ௭௫ | | * சுபரி | சபரி |
| ௭௬ | ௯ | னுரை | னுறை |
| ” | ௧௦ | வாரண | வாருண |
| ௭௮ | ௫ | ரவனெரு | ரவனொரு |
| ” | ௭ | கான | காள |
| ” | ௧௧ | ஞள் | நாள் |
| ௭௯ | ௩ | தீசன் | தீசற் |
| ” | ௮ | தியை | திசை |
| ௮௦ | | * பணிமதி | பணிநதி |
| ” | ௯ | வுறைஞ்சி | விறைஞ்சி |

